# வீட்டுக்கு ஒரு மருந்தகம்

## சித்தர் வைத்தியம்





மங்கள யோகீஸ்வரன்
மங்கள யோகீஸ்வர மீனு

அனுபவ - ஆதார மருந்துகள்

# வீட்டுக்கு ஒரு மருந்தகம்

## (சித்தர் வைத்தியம்)



**மங்கள யோகீஸ்வரர்**

**மங்கள யோகீஸ்வர மீனு**

(அனுபவ ஆதார மருந்துகள்)



**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,**

*41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,*

*சென்னை-600 098.*

# பொருளடக்கம்

## பதிப்புரை

பிணி தீர்க்கும் வைத்திய முறைகளில் சித்த வைத்தியமும் முக்கியமான ஒன்று. ஆங்கில ஆட்சிக் காலத்தில் இதன் முக்கியத்துவம் பின்னுக்குத் தள்ளப்பட்டிருந்த போதிலும் இன்று மீண்டும் சித்த வைத்திய முறைகள் குறித்த ஆய்வுகள் ஆங்காங்கே தொடங்கப்பட்டுள்ளது.

ஆங்கில வைத்திய முறை பரவலாக நகரங்களில் தான் செழித்தோங்கி நிற்கிறது. 85 விழுக்காடு மக்கள் வாழும் கிராமங்களில் சித்தவைத்திய அனுபவ மருந்துகளே பெருமளவு கையாளப்பட்டு வருகின்றன.

சித்தர்கள் தமிழகத்தின் சிறந்த அறிவியல் அறிஞர்கள். மக்கள் வாழ்வு மேன்மையடையும் கருத்துக்களையும், ஆய்வுகளையும் கண்டெடுத்துப் பரப்பியவர்கள். ‘உலகே மாயம்’, ‘வாழ்வே மாயம்’, ‘அவனன்றி ஓரணுவும் அசையாது’ என்று புலம்பி சோம்பித் திரிந்தவர்களல்லர். பொருள் முதல்வாத அடிப்படைக் கருத்துக்கள் அவர்கள் எழுத்துக்களில் நிரம்பிக் காணப்படுகின்றன.

‘‘வீட்டுக்கு ஒரு மருந்தகம்’’ என்னும் இந் நூலில் சித்த வைத்திய அடிப்படைகள் அனைத்தும் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன. நோய்களின் தன்மை, நோய் கண்டறியும் முறை, உரிய மருந்து வகைகளைத் தயாரிக்கும் வகை ஆகியவற்றுடன்

'குழந்தை வைத்தியம்' என்னும் சிறப்புப் பகுதியும், சித்தர் மருத்துவ கலைச் சொல்லகராதியும் அடங்கி யுள்ளன.

''வைத்தியம் என்பது சம்பாதனைக்குரிய தொழில் அல்ல. பிணிகள் போக்கி மக்களைக் காத் திடும் சேவை'' என்னும் கொள்கை படைத்த குடும்பத்தில் உதித்த தோழர் எம். வி. சுந்தரம் அவர்கள், எட்டுத் தலைமுறைகளாக அவரது முன்னோர் கையாண்டு வந்த சித்தர் வைத்திய முறையின் சாரத்தைத் தொகுத்து இந்நூலில் தந்துள்ளார். அவரது பெற்றோர்களான மங்கள யோகீஸ்வரர், மங்கள யோகீஸ்வர மீனா ஆகியோர் இந்நூலின் கர்த்தாக்கள்.

மார்க்சிய போதமும், அனுபவ ஞானமும் நிரம்பப் பெற்று மக்களைத் தலைமையேற்று நடத்தும் புரட்சிக்காரராக வாழும் தோழர் எம். வி. சுந்தரம் அவர்கள், மக்கள் நோயற்ற வாழ்வு பெற்று வாழ வேண்டுமென்னும் முயற்சிகளில் ஆழ்ந்த ஈடுபாட்டுடன் இன்றும் செயல்பட்டு வரும் காரணம், அவரது முன்னோர்களிடமிருந்து வழி வழியாகப் பெற்றடைந்த பண்பு என்பதை இந் நூலாக்கத்திலிருந்து தெரிந்து கொள்கிறோம். சிறப்பு மிக்க இந்நூலை ஆக்கித் தந்தமைக்காக அவருக்கு நமது நன்றி உரியது.

சித்த மருத்துவத்தில் ஈடுபாடு கொண்ட வைத்தியர்களுக்கும், அத்துறை மாணவர்களுக்கும் மட்டுமின்றி சகல மக்களுக்கும் பயன்தரும் நூல் இது.

—பதிப்பகத்தார்

# முன்னுரை

''வீட்டுக்கு ஒரு மருந்தகம்'' என்ற தலைப்பில் சித்தர் வைத்திய நூல் ஒன்று வெளியிட முன் வந்தேன். மூதாதையர் கண்ட சித்த மருத்துவ உண்மையை தமிழ் வாசகர்களுடைய கவனத் திற்குக் கொண்டுவர விரும்பினேன். வரலாற்று உண்மைகளை மறைக்காது, மறைய விடாது மக்கள் முன் கொணருவது வரலாற்று வளர்ச்சிக்கான சேவை என்று கருதினேன்.

என் தந்தை மங்கள யோகீஸ்வரர் ஒரு சைவ சித்தாந்தி, யோகி, சிறந்த சித்த வைத்தியர். மதுரை மாநகரில் நடைபெற்ற ஒரு சித்தவைத்தியர் மகாநாட்டில் இருதய வலியைக் குணப்படுத்தும் ''பதங்கம்'' என்ற புதிய மருந்தினை அறிமுகப் படுத்திய சிறந்த சித்த வைத்திய ஆய்வாளர். 1887 ஏப்ரல் 5-ல் இராமநாதபுரம் மாவட்டத்தில் திருவுத்தரகோச மங்கையில் பிறந்தார்.

என்னுடைய தாயார் மங்கள யோகீஸ்வர மீனு மாளுமதுரையில் பிரபல குழந்தை வைத்தியர். சித்தவைத்திய சிறந்த அறிவாளர்.

என் தந்தையின் தகப்பனார் முத்துக்காமாட்சி என்பவரும் சிறந்த சித்தவைத்தியர். அவருடைய தந்தை முத்தையா II என்பவரும் அவருடைய தந்தை கார்த்தவராயன் என்பவரும் சித்தவைத்தி யர்கள்.

கார்த்தவராயனின் தந்தை முத்தையா எழுதிய ஒரு ஏட்டுச் சுவடியில் தன் தந்தை சரவணன், அவருடைய தந்தை கதிர்வேல் ஆகியவர்கள் எழுதிவந்த வைத்தியச் சுவடுகள் ''வைத்திய சார சங்கிரம்'' எனும் தலைப்பில் நூலாக வெளி வருகிறது என்று குறிப்பிட்டிருக் கிறார்.

இவ்வாறு எட்டுத் தலைமுறை காலத்திய முன்னோர்கள் கையாண்டு அனுபவத்தில் ஆய்ந்து கண்டுள்ள சித்தவைத்திய உண்மைகள் சிலவற்றை அழிந்தவை போக எஞ்சிய சிலவற்றை சிறு நூலாகக் கொணர முன்வந்தேன்.

'அன்னை மீனா அனுபவக் குறிப்பு' —குறிப்பிடு வது போல்—''என்னுடைய மூதாதையர் எழுதி வைத்திருந்த அனுபவ வைத்தியச் சுவடிகள்— எட்டுப் பெரும் சுவடிகளை'' என் தாயாரிடமிருந்து பெற்று 1956-ம் ஆண்டு இராமநாதபுரம் மாவட்ட கலெக்டர் மூலமாக ஆறு சுவடிகளைத் தமிழ் மாநில அரசிடம் ஒப்புவித்து அதற்குரிய சான்றுகளைப் பெற்று என் தாயாரிடம் கொடுத்தேன்.

எஞ்சிய இரண்டு பெரும் சுவடிகளை என்னோடு அரசியலில் பணியாற்றிவந்த சக தோழர் மணலி கந்தசாமி அவர்களிடம் கொடுத்தேன்.

## அறிவுத் தொழில்-ஆன்மீகத் தொழில்

''தந்தை மங்கள யோகீஸ்வரர் அனுபவக் குறிப்பு'' குறிப்பிடுவது போல் என் தந்தையும், மூதாதையரும் நிலக்கிழார் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர்கள். இருப்பினும் மக்கள் பிணி தீர சித்தவைத்திய சாத்திரம் பயின்றும், வளர்த்தும் பணியாற்றிவந்தனர். 'சித்தவைத்தியம்' அவர்கள் உயிர் வாழ்வதற்கான குலத் தொழில் அல்ல!

குடும்பப் பாரம்பரியமான ஆன்மீகத் தொழிலாக இருந்து வந்தது. மேலும் ஆன்மீக வாழ்வுடன் இணைந்த பரம்பரை அறிவுத் தொழிலாகவும் சித்த வைத்தியம் இருந்து வந்தது.

## சித்தர்களின் ஆராய்ச்சித் துறை

சித்தர்கள் ரசவாதிகள் அல்ல. மருத்துவ ஆராய்ச்சியாளர்கள். தனவந்தர்கள், ஆளுபவர்கள் —ஏன் சித்த வைத்தியர்கள்கூட பொன் செய்யும் ஆசையில் ரசவாதத்திற்கு ஆதரவு தருவார்கள். இதன் மூலம் ஆராய்ச்சி நடத்துவது சாத்தியமாகும். இதுவே சித்தர்களின் தந்திரம் என்று என் தந்தை கூறுவார்.

மேலும் ரண சிகிச்சையில் மேலை நாட்டார் வல்லவர்கள், மருத்துவ ஆராய்ச்சியில் சித்தர்கள் மேலானவர்கள் என்றும் வாதாடுவார். இன்று சித்தர் வைத்திய முறையை ஏற்று வளர்த்திட அரசு முன் வந்திருப்பதால் சித்தரின் வைத்திய முறை வளர்ச்சிபெற சாத்தியமாகிறது.

ஆகவே எட்டு தலைமுறை கால அனுபவங்கள் வளர்ந்துள்ள சித்த வைத்திய விவரங்கள் சிலவற்றைச் சிறு நூலாக வெளியிடத் துணிந்து முன்வந்தேன்.

## நூலடக்கம்

1. என் தந்தை மங்கள யோகீஸ்வரரின் குறிப்பிலிருந்து—சித்தர்களின் 'நாடி சாத்திர' விளக்கம் தருகிறது.

2. நோயின் தன்மை, குணம் பற்றிய சித்தர் விளக்கம் தருகிறது.

3. மருந்து சுத்திமுறை—அனுஷ்டித்து வந்த அனுபவ விளக்கம் தருகிறது.

அன்னை மீனா அனுபவக் குறிப்பு குறிப்பிடுவது போல் ''1965-1966-ம் ஆண்டுக் காலத்தில் நோய்வாய்ப்பட்டிருந்த என் தாயாரிடம் அமர்ந்து விவரம் சேகரிக்கத் தொடங்கினேன். அவ்வாறு சேகரித்த குறிப்புகளிலிருந்து,

1. மங்கள யோகீஸ்வர மீனாவின் உரையாடல் ''சேய் நோய் பற்றிய விளக்கம்''
2. கைவைத்தியம்-செய்வைத்தியம் அனுபவ மருந்துகள்
3. 'வீட்டுக்கு ஒரு மருந்தகம்'

ஆகியவை விளக்கப்படுகின்றன.

இவை தவிர என் தந்தையும், தாயும் கூறியவை இணைந்த குறிப்புகளாக இடம் பெறுகின்றன. சித்தர் மருத்துவ அரும்பொருள் பதவுரையும், அளவெடைக் குறிப்பும் இடம் பெறுகிறது. சேய் நோய் பற்றிய விளக்கக் குறிப்பு எழுபது குழந்தை நோய்களின் குணம் பற்றிய விவரம் தருகிறது.

கைவைத்தியம்-செய்வைத்தியம் என்ற குறிப்பில் நூற்று எட்டு அனுபவ மருந்துகள் விளக்கப்படுகின்றன.

வீட்டுக்கு ஒரு மருந்தகம் என்ற குறிப்பில் பதினான்கு செய் மருந்துகள் பற்றிய விளக்கம் தரப் படுகிறது.

இச்சிறு நூல் சித்த வைத்திய ஆதரவாளர்கள், சித்த வைத்தியப் பயிற்சியாளர்கள், சித்த வைத்திய வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் பொதுவாக வாசகர்கள் அனைவருக்கும் பயன்தரும் என்று பெரிதும் எதிர்பார்க்கிறேன்.

அன்புள்ள,

**எம். வி. சுந்தரம்**

# சித்தரின் நாடி சாத்திரம்

**நோ**யாளி தன் உடல் வாதனே என்னவென்று கூறுவதை மிகப் பொறுமையாக கேட்க வேண்டும். அன்புடனும், ஆதரவுடனும் நோயாளியுடன் நடந்துகொள்ள வேண்டும். நோயாளிக்கு மன நிறைவு ஏற்படுத்துவது அவசியம். அதற்கு முதல் தேவை நோயாளி நம்பிக்கை பெறச் செய்வதே யாகும்.

### நோயின் தன்மை

நோயாளி கூறுவது வேதனே பற்றியதேயாகும். நோயின் தன்மை பற்றி அறிய முன் வரவேண்டும். நோயாளியின் விழிகள், நா, உடல் வாட்டம், வெளிப்படும் உடல் குறிப்பு, சுவாசம், நீர், மலம்— ஆகியவைப் பற்றிய பரிசோதனேயின் மூலமாக நோயின் தன்மையை அறிய முடியும்.

இருப்பினும் இரத்த ஓட்டம், இரத்த கதி— இவற்றைப் பரிசோதனே செய்தால் நோயின் தன்மையை ஆதாரமாகக் காணமுடியும். இதனேயே ''நாடி பார்த்தல்'' என்றழைக்கிருேம்.

நாடியின் நடை, நாடியின் அழுத்தம் அல்லது கதி—இவற்றினைக் கண்டு அறிவதே ''நாடி பார்த்தல்'' என்பதாகும். நாடியின் நடை, கதி பற்றிய அறிவும், அதிகமான அனுபவ அறிவும் பெற்றிருக்க வேண்டும். இதற்கு நாடி நூல் அறிவும் வேண்டும்; நோயாளியோடு இணைந்து சோதனை செய்து அனுபவ அறிவும் பெற வேண்டும்.

### நாடி நூல் விவரம்

சித்தர்கள் தமிழில் ஏராளமான நூல்கள்—நாடி நடை பற்றிய தத்துவத்தை விளக்கி எழுதி யுள்ளார்கள். செய்யுள் நடையில் எழுதியிருக்கிறார்கள். நாடி நடை பற்றிய தத்துவம் மனதில் நிலைக்க செய்யுள் நடை பயன் அளித்தது.

அகத்தியர், போகர், புலிப்பானி, உரோம ரிஷி, இயாக்கோப் (இராம தேவர்), தன்வந்திரி பகவான் ஆகியவர்கள் நாடி நடை பற்றிய விளக்க தத்துவ நூல்கள் எழுதியுள்ளார்கள். இவை யாவும் என்னுடைய விளக்கத்தின் ஆதார நூல் களாகும்.

### மூதாதையர் முறை

இவை தவிர மேற் கூறியவை போன்ற பல சித்தர்கள் கையாண்ட தத்துவங்களை—மருத்துவ விஞ்ஞானங்களை என்னுடைய மூதாதையர்கள் கையாண்டு வந்தனர்.

### நாடி சாத்திரம் பற்றிய விளக்கம்

மனித உடலில் எழுபத்திராயிரம் நரம்புகள் இருப்பதாக உடல் கூறு சாத்திரம் விவரிக்கிறது.

இருதயத்திலிருந்து இரத்தத்தை மனித மூளைக்கும், உடலில் உள்ள அங்கங்களுக்கும் கொண்டு செல்லும் இரத்தக் குழாய் நரம்பு என்பதாகும். இருதயம் செயல்படும் போது அதனுடைய அழுத்தத்தால் நரம்புகளின் வழியாக இரத்தம் ஓடுகிறது. அவ்வாறு ஓடும்பொழுது—நடை, வேகம், துடிப்பு, கதி ஆகிய அசைவு சக்திகள் ஏற்படுகின்றன. அவைத் தவிர மேல் நோக்கிய அழுத்தமும், கீழ் நோக்கிய அழுத்தமும் இரத்த ஓட்டத்தில் ஏற்படுகிறது.

இரத்த ஓட்டத்தின் மேற்கூறிய சக்திகளைக் காண முடிவதால் அவற்றினை ''நாடிகள்'' என்று கூறுகிறோம். மனித உடலில் உள்ள எல்லா நரம்பு களிலும் இவற்றைக் காணமுடிவதில்லை. பத்து நாடிகளில் மட்டும் காண முடிகிறது. அவ்வாறு காணமுடிகிறதென்றால் காரணம் என்ன? பத்து நாடிகளை பத்து விதமான ''வாயுக்கள்'' இரத்த அழுத்தத்தைக் கொடுத்து வருகின்றன.

மின்சார ஓட்டம் உள்ள கம்பிகளைக் காணுவது போல் பத்து விதமான ''வாயுக்கள்'' ஓட்டம் உள்ள நரம்புகள் காணமுடிகின்றன. பத்து நாடிகள் வாயுக்களின் ஓட்டம் உள்ளவையாக இருப்பினும் அவற்றில் மூன்று நாடிகள் மிகப் பிரதானமானவை யாகும். இம்மூன்று நாடிகளின் இரத்த ஓட்டத்தோடு பாயும் வாயுவின் விளைவாக எழும் நடை கதி அல்லது அழுத்தம்—ஆகிய இவற்றினைத் ''தாது'' என்று கூறுகிறோம்.

அவ்வாறு பிறக்கும் தாது—வாதம், பித்தம், சிலேத்மம்—என்று மூன்று வகைப்படும்.

வாத நாடியில் அபாணன் எனும் வாயு,
பித்த நாடியில் பிராணன் எனும் வாயு,
சிலேத்ம நாடியில் சமானன் எனும் வாயு

ஆகியவை இரத்த ஓட்டத்துடன் இணைந்து இயங்குகின்றன.

## நாடி நடை கண்டு நோய் நாட

ஆண், பெண் இருவரின் கைகளில் நாடி நடை பார்ப்பது எளிது. தவிர கண்டம், கன்னச் சுழி, காலின் பெருவிரல், கணுக்கால் ஆகிய இடங்களிலும் நாடி நடை காணலாம். இருந்தாலும் கைகளில் நாடி பார்ப்பது மற்றதனைத்தையும் விட எளிதாகும்.

ஆணாக இருந்தால் வலது கையிலும், பெண்ணாக இருந்தால் இடது கையிலும் நாடி பார்க்க வேண்டும். மணிக்கட்டிலிருந்து ஒரு அங்குலத்திற்கு மேல் வைத்தியர் தனது மூன்று விரல்களால் சமமாக அழுத்தவேண்டும். பின்னர் மெதுவாக ஒவ்வொரு விரலாக அழுத்தியும், தளர்த்தியும் நாடியின் துடிப்பையும், நாடியின் அழுத்த கதியையும் காண வேண்டும்.

மணிக்கட்டிலிருந்து ஓர் அங்குலம் தூரத்தில் முதலாக உள்ள வைத்தியரின் ஆள்காட்டி விரல் வாத நாடியையும், இடை விரல் பித்த நாடியையும், மோதிர விரல் சிலேத்ம நாடியையும் காட்டுகிறது.

சித்திரை, வைகாசி மாதங்களில் காலை நேரத்திலும் ஆனி, ஆடி, ஐப்பசி மாதங்களில் மதிய நேரத்திலும் ஆவணி, புரட்டாசி, பங்குனி மாதங்களில் இரவு நேரத்திலும், மார்கழி, தை, மாசி மாதங்களில் மாலை நேரத்திலும் நாடி பார்த்தல் வேண்டும். வெளிப்புறத்தில் நிலவும் பருவ கால வெப்ப-தட்பத்திற்கும் நாடியின் நடையோட்டத்திற்கும் இணைப்பு உண்டு. ஆகவே மேற்கூறிய முறையில் பார்த்தால் நாடியின் நடை மிகத் தெளிவாகத் தெரியும்.

## நாடியின் 'கதி' அளவு

உடல் ஆரோக்கியமான ஓர் ஆண் அல்லது ஒரு பெண்ணின் வாத நாடியின் கதி அல்லது அழுத்தம் ஒரு மாத்திரை என்ற அளவில் வைத்தால், பித்த நாடியின் 'கதி' அல்லது அழுத்தம் அரை மாத்திரை, சிலேத்ம நாடி கால் மாத்திரை ஆக இருக்கும்.

நாடியின் சலனத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் சற்று வித்தியாசம் காணலாம். ஆணுக்கு வாத நாடி மயில், அன்னம், கோழியின் நடைபோல் வெட்டி நடை போடுகிறது. பித்த நாடி ஆமை, அட்டை ஊர்வதுபோல் செல்லுகிறது. சிலேத்ம நாடி தவளைபோல தத்திச் செல்லுகிறது.

பெண்ணுக்கு வாத நாடி சர்ப்பம் ஊர்வது போல் நெளிந்து செல்லுகிறது. பித்த நாடி தவளை போல் தத்திச் செல்லுகிறது. சிலேத்ம நாடி அன்னம் போல் வெட்டி நடை போடுகிறது.

நாடியின் சலனத்திலிருந்து நோயின் தன்மை என்னவென்று காண முயலுவதைவிட நாடியின் துடிப்பிலிருந்து காண முயலவேண்டும். நாடியின் சலனத்திலிருந்து நோயின் தன்மை காண அனுபவம் தேவைப்படுகிறது.

நோயாளிகளின் நாடித் துடிப்பு சலனம் பற்றி தொடர்ந்து பார்த்து வரவேண்டும். சாத்திர அறிவைவிட அனுபவ அறிவுதான் மேலானது. ஏன்? சாத்திர அறிவுடன் இணைந்து செயல்படும் அறிவு அனுபவ அறிவாகும்.

## வாதனை என்ன?

1. வாதம் தனக்குரிய இயல்பான துடிப்பின் கதியை மீறி அதிக அழுத்தமாக நடந்தால், அதாவது வாதம் இருக்கவேண்டிய மாத்திரைக்கு அதிகமானல் மனிதனுக்கு உடல் உலேச்சல், வாயு, உடல் குடைச்சல், குடல் புரட்டல், பொருமல், மலக்கட்டு, உணவில் நாட்டம் இன்மை போன்ற வாதனைகள் இருந்துவரும்.
2. பித்தம் தனக்குரிய இயல்பான துடிப்பின் கதியை மீறிவிட்டால் மனிதனுக்கு உடல் காந்தல், வரட்சி, உடல் எரிச்சல், தலை நோவு, நாவறட்சி, நாவில் கசப்பு, ஆரோசியம், தாகம், வாந்தி, நெஞ்செறிவு போன்ற வாதனைகள் இருந்துவரும்.
3. சிலேத்மம் தனக்குரிய இயல்பான துடிப்பின் கதியை மீறிவிட்டால் மனிதனுக்கு இருமல்,

ஈளை, மேல் மூச்சு வாங்குதல், நெஞ்சுவலி, விலாவலி போன்ற வாதனைகள் இருந்துவரும்.

### தொந்தம் என்ன?

வாதம், பித்தம், சிலேத்மம் என்ற மூன்று நாடிகளில் ஏதாவது இரண்டு நாடிகள் தங்களது இயல்பான துடிப்பின் கதியை மீறி அதிகமாகி விட்டால் அவ்வாறு மீறிய இரண்டு நாடிகளின் ''தொந்தம்'' என்று அறிந்துகொள்ள வேண்டும்.

உதாரணமாக 1. வாதம் இரண்டு மாத்திரை, பித்தம் ஒரு மாத்திரை என்று துடிப்பின் ''கதி'' மீறி நடந்தால் மனிதனுக்கு ''வாதபித்த தொந்தம்'' எனும் வாதனை பாதித்து வருகிறது என்று கொள்ளவேண்டும். வாய்வு மிகுதி ஏற்பட்டு அதன் விளைவாக உடல் வேதனை, உடல் எரிச்சல், உடல் குடைச்சல் போன்ற நோய்களுக்கு உள்ளாகி விடும்.

2. பித்தம் இரண்டு மாத்திரை, வாதம் ஒரு மாத்திரை என்ற அளவில் நாடித் துடிப்பு இருந்தால் ''பித்த-வாத தொந்தம்'' ஆகும். உடலில் உஷ்ணம் மிகுதியாகி அதிக தாகம், வாய் கசப்பு, கண்ணெரிச்சல் போன்ற நோய்களுக்கு உள்ளாகி விடும்.

3. சிலேத்மம் இரண்டு வாதம் ஒன்று என்ற மாத்திரை அளவில் நாடித் துடிப்பின் கதி மீறி நடந்தால் மனிதனுக்கு ''சிலேத்ம-வாதத் தொந்தம்'' எனும் வாதனை பாதித்து வருகிறது.

கபம் மிகுதி ஏற்பட்டு அதனுல் ஜன்னி கண்டு பிதற்றல் ஏற்படலாம். வாய் தித்திக்கும்.

4. வாதம் இரண்டு, சிலேத்மம் ஒன்று என்ற மாத்திரை அளவில் நாடித் துடிப்பின் கதி மீறி நடந்தால் ''வாத-சிலேத்ம தொந்தம்'' என்று தெரிந்துகொள்ள வேண்டும். வயிற்றுப் பொருமல் ஏற்படும், வாய் பிதற்றும்.

5. பித்தம் இரண்டு, சிலேத்மம் ஒன்று என்ற மாத்திரை அளவில் நாடித் துடிப்பின் கதி மீறி நடந்தால் ''பித்த-சிலேத்ம தொந்தம்'' ஆகும். தலை இசிவு, பிடரி நோவு காணும்.

6. சிலேத்மம் இரண்டு, பித்தம் ஒன்று என்ற மாத்திரை அளவில் நாடித் துடிப்பின் கதி மீறி நடந்தால் ''சிலேத்ம-பித்த தொந்தம்'' என்று தெரிந்துகொள்ள வேண்டும். உடல் குளிரும், காது கேளாது, தாகம் மிகும்.

### மூன்று நாடிகள்

* வாதம், பித்தம், சிலேத்மம் என்ற மூன்று நாடிகளும் அமர்ந்து, தளர்ந்து, தனது துடிப்பின் கதி இழந்து காணப்பட்டால் வாய்வு, மந்தம் ஆகிய உடல் வாதனைக் குள்ளாகியிருப்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

* வாதம், பித்தம், சிலேத்மம் என்ற மூன்று நாடிகளும் தனது துடிப்பின் கதி இழந்து ஒரே மாதிரியான படபடப்பில் நடந்தால் ஜன்னி

யின் குணம் என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

* வாதம், பித்தம், சிலேத்மம் மூன்றும் உள்ளுக்குள்ளேயே ஒடுங்கிப் போய்விட்டால் வயிற்று நோவு என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

## நாடித் துடிப்பின் கதி

1. வாதம்—நாடித் துடிப்பு கதித்து நடந்தால் மந்த ஜன்னி, வாய்வு ஆகிய நோய் மேலோங்குவதற்கான அறிகுறி. உடல் மெலிவு காணும்.

2. வாதம், பித்தம் இரண்டு நாடிகளின் துடிப்பு கதித்து நடந்தால் எரிகுன்ம நோயின் அறிகுறியாகும்.

3. பித்தம்—நாடித் துடிப்பு கதித்து நடந்தால் பயித்தியம், மனநோய் அதிகமாகும்.

   மேலும் பித்தம் கதித்த போது வாதம் வரும். வயிற்றில் வாய்வு மிகும். பிதற்றல் காணும். பிணி மிகும்.

4. சிலேத்மம்—நாடித் துடிப்பு கதித்து நடந்தால் இருமல், ஈளை அதிகமாகும்.

5. சிலேத்ம நாடி படபடத்து ஓடினால் தலை கனப்பு, பீசனம், மண்டைச் சூலை ஏற்படும் என்பதற்கான முன் அறிவிப்பாகும்.

6. சிலேத்ம நாடி கதித்து நடந்தால் ஜன்னி காணும். உடல் மெலியும்.

## கர்ப்பவதியின் நாடி

கர்ப்பம் அடைந்த பெண்ணின் நாடி முதல் மாதம் வாதநாடி புழுப்போல் ஊர்ந்து நெளிந்து செல்லும். மூன்ருவது மாதம் வாதநாடி விட்டில் போல் பதைத்துத் தாவி ஓடும். எட்டாவது மாதம் புழுப்போல் ஊர்ந்து நெளிந்து செல்லும்.

கர்ப்பவதியாகத் தோற்றத்தில் காணப்பட்டாலும் அந்த பெண்ணின் வாதம், பித்தம், சிலேத்மம் என்ற மூன்று நாடிகளும் மெலிந்தும், பதிந்தும் நாடித் துடிப்புக்கள் இருந்தால் நிச்சயம் கர்ப்பம் தரிக்கவில்லை என்று கூறிவிடலாம்.

தவிர இந்த பெண் சூதக வாயுவால் பாதிக்கப் பட்டிருக்கிருள் என்றும் சொல்லிவிடலாம்.

## நாடியில் சலனம்

— பசி மேலிட்டவனுக்கு மூன்று நாடிகளும் தூங்கி அசைதியாக ஓடும்.

— பாம்பு விஷம் ஏறியவனுக்கு மூன்று நாடிகளும் அடங்கி ஓடும்.

— வயிற்றுவலி மிகுந்தவனுக்கு மூன்று நாடிகளும் உள்ளடங்கி ஓடும்.

— கிரந்தி நோயுள்ளவனுக்கு மூன்று நாடிகளும் வெள்ளம் பாய்வது போல் ஓடும்.

— ஜன்னி கண்டவனுக்கு மூன்று நாடிகளும் படபடத்து ஓடும்.

மேற்கூறியவர்களின் நாடியைப் பிடித்துப் பார்த்து அவர்களின் உபவாதையைத் தெரிந்து

கொள்ள முடியும். இருப்பினும் நாடியின் சலன வேறுபாடுகளைத் தெரிந்துகொள்ள அனுபவப் பயிற்சி பெற்றிருக்க வேண்டும். சாத்திரம் ஆதாரமாக இருப்பினும் சித்த வைத்தியத்தில் அனுபவமே பிரதானம். ஆதாரத்தை அறிய வைப்பது அனுபவமேயாகும்.

நாடியின் சலனத் தன்மையைத் தெரிந்து கொள்ள நோயாளிகளின் நாடியை நாடவேண்டும்.

உதாரணமாக:

புண், புரை ஏற்பட்டு அவதிப்படுபவன் நாடியைப் பார்த்தால் வாதமும், பித்தமும் சுழன்று ஓடுவதைக் காணலாம்.

ஜுரம் அதிகமாக உள்ளவன் நாடியைப் பார்த்தால் வாதமும், பித்தமும் கலங்கி ஓடுவதைக் காணலாம்.

கணைக்காய்ச்சல் அதிகமாக உள்ள ஒரு குழந்தையின் நாடியைப் பார்த்தால் பித்தமும் வாதமும் கலங்கி நடக்கும்.

பீனிசம் அதிகமாக உள்ள ஒருவரின் நாடியைப் பார்த்தால் பித்தமும் சிலேத்மமும் சுழன்று நடக்கும்; விக்கல் மேலிடும்போது சிலேத்மமும், வாதமும் கலங்கி நடக்கும்.

இவ்வாறு நாடிகள் ஒன்றோடொன்று கலங்கியும், ஒன்றோடொன்று சுழன்றும் நடப்பதைப் பார்ப்பதற்கு இரு விரல்களில் ஒரு விரலைச் சற்று அழுத்தியும், மறு விரலை சற்று தளர்த்தியும்—மாறி

மாறிப் பார்த்தால் கலங்கும் தன்மையையும், சுழலும் தன்மையையும் உணரமுடியும்.

உணர்வு அல்லது உணர்தல் எனும் அறிவு அதிக மான அனுபவங்களிலிருந்துதான் பெற முடியும்.

நாடி சாத்திர அறிவை நாடி பார்த்து அனுபவ அறிவாகப் பெறவேண்டும். எனவே சித்த வைத்தியம் அனுபவ வைத்தியமாக மேலும் மேலும் வளர்ந்து வருகிறது. அறிவு அனுபவத்தோடு கலந்து வளரச் செய்வதே சித்தர் முறை.

### மரணம் குறிக்கும் நாடி நடை

1. வாதம், பித்தம், சிலேத்மம்—இம்மூன்று நாடி களும் துடிப்பின் 'கதி' தொய்ந்து, அதன் பலம் ஈனமாகி கீழே போய்க்கொண்டிருந்தால் மரணம் நிச்சயம் என்று கூறிவிடலாம்.
2. ஒருவனின் சிலேத்ம நாடி பித்த நாடியை அணைத்துக்கொண்டு மேலேறிச் செல்லும் நடையில் ஓடினுல் ஒரு நாளில் மரணம் நிச்சயம்.
3. ஒருவனின் சிலேத்ம நாடி வாத நாடியைப் பற்றிக் கொண்டு ஓடினுல் ஒரு மணி நேரத்தில் மரணம் நிச்சயம்.
4. ஒருவனின் வாத நாடியின் ஓட்டம் சிதறி ஓடினுல் எட்டு நாள்களில் மரணம் நிச்சயம்.
5. ஒருவனின் சிலேத்ம நாடியின் ஓட்டம் வெள்ளம் போல் மீறி ஓடினுல் இரு நாட்களில் மரணம் நிச்சயம்.

6. ஒருவனின் பித்த நாடியின் ஓட்டம் சிதறிப் போய் ஓடினுல் மூன்று நாள்களில் மரணம்.

7. வாதம், பித்தம் இரண்டு நாடிகளும் சிதறி ஓடினுல் பதினைந்து நாட்களில் மரணம்.

8. வாதம், பித்தம், சிலேத்மம் இம்மூன்று நாடிகளும் சிதறி ஓடினுல் நாற்பது நாட்களில் மரணம்.

இவ்வாறு நாடிகளின் ஓட்டம் மரண காலத்தை அறிய உதவுகிறது. இந்நிலைத் தெரிந்து நாடி நடையில் மாற்றத்தைக் கொண்டுவர உரிய மருந்துகளைக் கொடுத்து நோயாளியை மரணத்திலிருந்து பாதுகாக்க உதவி செய்யவேண்டும்.

நோயாளியின் நாடி நிலை தெரிந்து நோய் மீளாது தடுத்து பாதுகாக்க மருந்துகள் தர வேண்டும். மருந்துகளில் மாற்றம் செய்ய நாடி நிலை உதவுகிறது.

### நோய் பற்றிய உடல் குறி

நோயாளியின் நாடி பார்த்து நோயின் தன்மை பற்றி முதலில் அறியவேண்டும். அதன் பின் உடல் குறி பார்த்து மேலும் விவரம் தெரிந்துகொள்ள வேண்டும்.

உதாரணமாக, 1. வாதநோய் உள்ளவரின் உடல் குளிர்ந்தும், முகம், விழிகள், பற்கள், கருப்படைந்தும் காணப்படும். நாக்கு கர வரண்டும், முள்ளு முள்ளாகவும் காணப்

2. பித்த நோய் உள்ளவரின் உடல் சூடாக வும், முகம், விழிகள், பற்கள், மலம், நீர் மஞ்சளாக வும் காணப்படும்.

3. சிலேத்ம நோய் உள்ளவரின் உடல் வியர்த்தும், முகம், விழிகள், பற்கள், மலம், நாக்கு, நீர் வெளுத்தும் காணப்படும்.

4. ''தொந்தம்'' என்ற நோய் உள்ளவரின் உடல், முகம், விழிகள், பற்கள், நாக்கு, நீர், மலம் பல்வேறுன தோற்றம் தரும்.

### மரணம் பற்றிய உடல் குறி

நோயாளியின் விழி, மூக்கு, காது, உச்சி, நெஞ்சு, உள்ளங்கால், உள்ளங்கை—ஆகிய இவை வெளுத்தும், பாதங்கள் குளிர்ந்தும் போனல் மரணம் என்பது நிச்சயம்.

### குழந்தைகள் நாடி

மனிதர்களின் நாடித் துடிப்பு போல் குழந்தை களின் நாடித் துடிப்பும் இருக்கிறது. வாதம், பித்தம், சிலேத்மம் எனும் நாடித் துடிப்புக்கள் இருக்கின்றன. நாடி சாத்திரம் குழந்தைகளுக்கும் பொருந்தும். இருந்தாலும் அதிகமான அனுபவ அறிவு தேவை.

தவிர குழந்தைகளைப் பாதிக்கும் நோய்களின் தன்மை, நோய் வர காரணம், தாய்ப் பாலூட்டும் தாய் உட்கொள்ளும் உணவு, தாயின் உடல்நிலை ஆகியவை போன்ற பல விவரங்கள் தெரிய வேண்டும்.

## நோய்களின் தன்மையும் விவரமும்

நோயாளியின் நாடி பிடித்து நோயின் தன்மை காணவேண்டும் என்று விரும்பினுல் நோய் பற்றிய விவரங்கள் தெரிந்திருக்க வேண்டும்.

நாடியின் துடிப்பும், நாடியின் நடையும், நாடியின் சலனமும், நாடியின் தொந்தமும், நோயாளி அவதிப்படும் நோயின் தன்மையைத் தெளிவுபடுத்துகிறது.

ஆனுல் நோய் பற்றிய உண்மை விவரங் களைத் தெளிவாகத் தெரிந்திருக்க வேண்டும். நோயின் காரணத்தையும் தெரிந்திருக்க வேண்டும்.

கடிகாரத்தின் முள் ஓட்டம் மணியைக் காட்டு கிறது என்பது உண்மை. ஆனுல் நாள், மணி பற்றிய முழு அறிவு பெற்றிருந்தால் கடிகாரம் பயன் தருவதுபோல் நோய் பற்றியும், நோயின் தன்மை பற்றியும் முழு அறிவு பெற்றிருந்தால்தான் நாடி சாத்திரம் பயன்தரும்.

## நோய் பற்றிய சித்தர் விளக்கம்

மனிதர்கள் உட்கொள்ளும் உணவு, தண்ணீர், சுவாசிக்கும் காற்று ஆகியவற்றிலிருந்து பெரும் பாலும் நோய்கள் வருகின்றன.

முறை தவறிய நடவடிக்கைகள், பழக்க-வழக்கங்கள், வாழ்க்கை முறைகள்—ஆகியவை நோய்களை வளர்க்கின்றன.

சில நோய்கள் தாயின் கருப்பையிலிருந்து தோன்றுகின்றன. சில நோய்கள் பாரம்பரியம் பற்றியவையாகவும் இருக்கின்றன.

மனிதனின் வீணான எண்ணங்களும் புதுப்புது விதமான நோய்களைப் பிறப்பித்து வருகின்றன. இவை அனைத்தையும் பற்றி தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். இருந்தாலும் அடிப்படை யான சில விஷயங்களைப் புரிந்துகொள்ள வேண்டும்.

நோய் வருவதற்கான ஒரு-பொருள் காரணம் உண்டு.

நோய் பீடித்து வளருவதற்கான ஒரு-மனோநிலை காரணம் உண்டு.

நோய் தீர்த்து உயிர் வாழ்வதற்கான ஒரு-மருத்துவ காரணம் உண்டு.

இந்த மூன்று காரணப் பொருள்களை விளக்கு வதுதான் சித்தர் சாத்திரம்.

நோயின் காரணம், நோயின் குணம் காண வேண்டும். இது முதலாவதாகும்.

நோய் குணமாகும் என்ற நம்பிக்கையை அதற்கான அறிவை நாடவேண்டும். இது இரண்டாவதாகும்.

நோய் தீர்க்கும் மருந்துகளைக் கொடுத்து உயிர் வாழச் செய்யவேண்டும். இது மூன்ருவ தாகும். இந்த மூன்று தன்மைகளைத்தான் ''மணி-மந்திரம்-ஔஷதம்'' என்ற மூன்று வார்த்தை களில் தாரக மந்திரமாக சித்தர்கள் கையாண்ட வைத்திய முறை.

நோய் வருவதற்கான ஒரு பொருள் காரணம் ''மணி'' என்ருல் நோய் தீர்ப்பதற்கான ஒரு பொருள் காரணம்—''ஔஷதம்'' (மருந்து). இவ்விரண்டினை மட்டும் எடுத்துக்கொண்டால் போதும். ''மந்திரம்'' என்பது நம்பிக்கை ஊட்டுவ தாகும்.

வைத்தியர் நோயாளியிடம் மனே நம்பிக் கையை வளர்ப்பதென்பது—அதாவது ''மந்திரம்'' என்பது நடைமுறை அனுபவத்திலிருந்து வருவ தாகும். அனுபவத்தை நடைமுறையில்தான் பெற முடியும். மணி-மந்திரம் அல்லது மனே-மந்திரம் என்பது ஒரு பொருளைத் தருவதேயாகும்.

## தகாத உணவில் வரும் நோய்கள்

உடல் ஒத்துக்கொள்ளாத—தகாத உணவால், சில மாமிசத்தால், அரை வேக்காடுள்ள சில உணவுப் பொருளால், மாப்பண்டத்தால், அளவு மீறிய எண்ணெய்ப் பதார்த்தங்களால், அளவு மிஞ்சிய எருமைப் பால் உணவால் 'மாந்தம்' ஏற்படுவது உண்டு. பண்டைக்கால வாழ்க்கையில் உள்ள அனுபவம்.

மாந்தம் என்பது ஜீரணக்குறைவு என்பது மட்டும் அல்ல; நோயின் தன்மையைப் பெற்ற ஒரு நிலை. அவ்வாறு ''மாந்தம்'' என்ற ஒரு நிலை ஏற்பட்டுவிட்டால் அதிலிருந்து பல்வேறான ''வாய்வு-நோய்கள்'' தானாக ஏற்படுகின்றன. ''வாய்வு-நோயிலிருந்து'' பல்வகையான வேறு நோய்களும் தோன்றி வளருகின்றன.

இவ்வாறாக ஒன்றிலிருந்து ஒன்றும் மற்றொன்றி லிருந்து வேறொன்றுமாக புதுப்புது வகையான நோய்கள் தோன்றியும், வளர்ந்தும் வருகின்றன.

உயிர்களின் தோற்றத்தில் ''பரிணாமம்'' ஏற்படுவதுபோல் நோய்களின் தோற்றத்திலும் ''பரிணாமம்'' ஏற்படுகிறது.

உதாரணமாக—மாந்தம், வாய்வு—இவ்விரண்டி லிருந்தும் கடுமையான ஜுரம் ஏற்படுகிறது. மாந்தம், வாய்வு, ஜுரம் இம்மூன்றிலிருந்தும் ''திரிதோஷங்கள்'' ஏற்பட்டு விடுகின்றன.

ஆகவேதான் மாந்தம், வாய்வு, ஜுரம் இம்மூன்றும் குணம் ஆகும் வரை வைத்தியர் கூறும்

உணவுக் கட்டுப்பாட்டை நோயாளி கண்டிப்பாக அமுல் நடத்தி வரவேண்டும்.

சுரம் கண்ட பின் அதற்குள் வாய்வும், மாந்தமும் மந்தித்து விடுகிறது. நோயாளி ஜுரம் அல்லது காய்ச்சலை மட்டும்வேதனையோடு பார்க்க முடிகிறது. சிறிது ஜுரம் குறைந்தால் போதும், நோயாளி தன்னிஷ்டம்போல் உணவு உட்கொள்ள விரும்புவதைக் காணலாம். நோயாளியின் விருப்பத்தை— மந்தித்து உள்ளடங்கியிருக்கும் ''மாந்தம்–வாய்வும்'' தூண்டி வருகிறது. கள்ளப் பசியைக் கிளப்பி வருகிறது.

**வாய்வு**

மனிதன் குடிக்கும் தண்ணீர், சுவாசிக்கும் காற்று, சுற்றுப்புற வெட்பம்-தட்பம் ஆகிய இவற்றிலிருந்து ''கபம்'' ஏற்படுகிறது. உணவிலிருந்து ''பித்தம்'' ஏற்படுகிறது.

இவ்வாறுக ஏற்படும் ''பித்தத்தில்''—''கபம்'' சேர்ந்துவிட்டால் போதும், இந்த இரண்டின் சேர்க்கையால் தோன்றுவதுதான் ''வாய்வு'' என்பதாகும். ''வாய்வு'' என்றால் காற்றல்ல. ஒரு நோயின் தன்மை.

''மாந்தம்'' என்பதிலும் ''பித்தம்'' என்ற சேர்க்கை உண்டு. ''ஜுரம்'' என்பதிலும் ''பித்தம்'', ''கபம்'' என்ற இரண்டின் சேர்க்கை உண்டு.

பித்தத்தில் கபம் சேர வாய்வு தோன்றுகிறது. பித்தம், கபம், வாய்வு ஆகிய மூன்றும் சேர ஒரு விதமான சூடு-அல்லது வெதுவெதுப்பு ஏற்படுகிறது.

இதை சூடு அல்லது உஷ்ணம் அல்லது வெது வெதுப்புதான் ''சுரமாக'' வளர்ந்து விடுகிறது.

மனிதன் உட்கொள்ளும் உணவு, நீர், சுவாசிக்கும் காற்று, மனித வாழ்வுக்கு உகந்த புறச் சுற்றுச் சூழல்—ஆகிய இவற்றின் விளைவாக மனித அவயவங்கள் செயல்படுகின்றன.

அதன் விளைவாக ஏற்படுவது மனிதனின் உள் சூடு. ஆனால் அந்த உள்சூடு சுரமாக கொதிக்கும் போது நோய் என்பதாகிறது.

உடலின் உள் மாற்றங்களின் விளைவாக உடல் வெளிப்புறத்தையும் பாதித்து விடுகிறது. உள் ''சுரம்'' கன்னத்தில் கட்டியாகக்கூட வெடித்து விடுகிறது.

வெளிப்புறத்தில் கட்டியாக வெடித்தால் மனிதனால் காண முடிகிறது. ஆனால் உள் உறுப்பு களில் ஏற்படும் வெடிப்புக்களை மனிதன் காண முடிவதில்லை. ஆகவே நோயாளிகள் வைத்தியர்கள் கூறுவதற்கு உட்பட்டு நடத்தல் அவசியமாகிறது. இந்த நம்பிக்கையைப் புகட்ட வேண்டும்.

வாய்வு மிகுதியானல் மலம் கட்டுகிறது. மேல்மூச்சு வாங்கி திணறல் ஏற்படுகிறது. உடலில் ரணங்கள் தோன்றி அதிகமாகின்றன. இதன் விளைவாக பல்வேருன நோய்கள் தோன்றுகின்றன.

வாய்வு கபத்துடன் சேரும்பொழுது நெஞ்சு வலி, மயக்கம் தருகிறது. வாய்வு பித்தத்தை தம்பிக்க வைத்துவிட்டால் பேசிக்கொண்டிருக்கும்

மனிதன் திடீரென்று மரணம் அடைவதைக் காண லாம். இருதயத் துடிப்பு நின்றுவிட்டது. அதனுல் அந்த மனிதன் இறந்துவிட்டான் என்று சொல்லுவது சரிதான். ஆனுல் வாய்வு மேலோங்கி பித்தத்தைத் தம்பிக்க வைத்த உடலின் உள் இயக்க காரணத்தைக் காண முடியாது. உண்மையான இந்த காரணத்தைத் தெரிந்திருந்தால்தான் நோயின் தன்மையைப் புரிந்து சிகிச்சை தரமுடியும்.

காலம் கடந்து உணவு உட்கொள்ளுவது, பசித்தபோது காலத்தில் உணவு சாப்பிடாதிருப்பது வேலை மிகுதி என்று கூறி பசியை அடக்கிக்கொண்டு இருப்பது—இது போன்ற பழக்க வழக்கம் வாய்வு எனும் நோயை வலிய வருவிப்பதாகும்.

வாய்வு குண்டலிக்குள் புகுந்துவிடுகிறது. மலத் தோடும் வாய்வு சேர்ந்து 'சூடு' கிளம்பிவிடுகிறது. வாய்வும், சூடும் சேர்ந்து அபானத்தைச் சுருக்கி விடுகிறது. மலச்சிக்கல் ஏற்படுகிறது. இதன் விளைவு ''முளை மூலம்'' ஏற்படுகிறது. முளை மூலத்தில் சில அபானத்தை இறுக்கிவிடும்; சில அபானத்தில் ரணத்தை உண்டாக்கும். இரத்த மூலத்தில் வாய்வுடன் கூடி இரத்தம் விழும்.

### வாய்வு ரோகம்

வாய்வு வாத நீர் அதிகம் சுரக்கச் செய்கிறது. பின் வாதநீர் அதிகரித்ததும் வாய்வுடன் சேர்ந்து விடுகிறது. மனித உடலின் இரத்தக் குழாய்கள் அல்லது நரம்புகள் வழியாகவும், இன்னும் பல வழிகளிலும் துர்நீர்களை உடலில் பல பாகங்களுக்குக்

கொண்டு செல்லுகிறது. உடலில் மேக ரோகம் ஏற்படக் காரணமாகிறது.

## மேக ரோகம்

வாய்வு ரோகத்தால் வெட்டை, மகா சீதம் எனும் நோய்கள் வருகின்றன. இவ்விரண்டும் மேக ரோகத்தை வளர்த்து வருகின்றன. மேக ரோகத்தால் கிரந்தி ஏற்படுகிறது. 'கிரந்தி ரணத்திலிருந்து சீமேகம் வருகிறது'. கிரந்தி, சீமேகம் எனும் இரண்டிலிருந்து வாயுசூலை தோன்றுகிறது.

கிரந்தி, சீமேகம், வாயுசூலை இம்மூன்றின் சேர்க்கையால் பலவகையான மேகநோய்கள் தோன்றுகின்றன.

உயிரினங்களின் பரிணாமம் போன்று உடலின் நோயினங்களின் பரிணாமம் ஏற்படுவதை தெளிவாகப் புரிந்து, நோய் வளராது தடுத்துவிட வேண்டும். உணவுப் பழக்கம் பிரதானமானதாகும்.

உணவுக் கட்டுப்பாடு சித்தர் வைத்திய முறையில் மிகப் பிரதானமாகும். நோய் வராது தடுக்கவும், நோய் வந்த பின்—நோய் வளராது தடுக்கவும் உணவில் கட்டுப்பாடு பிரதானமாக இருக்கிறது.

## நோயாளியின் வாதனை

காலம் கடந்து உணவு உட்கொள்ளும் பழக்க வழக்கம், மல சலம் கழிவதிலும் அடக்கி வரும் பழக்க வழக்கம்—ஆகிய இவற்றினால் வாய்வு மிகுந்து பல நோய்களை உண்டாக்கி வருகிறது.

மந்த வாய்வு, குண்டல வாய்வு, குடல் வாய்வு, அத்தரு வாய்வு, துடி வாய்வு, அண்ட வாய்வு ஆகியவை போன்ற மேலும் பல வாய்வு ரோகங்களை உண்டாக்கி விடுகிறது.

இத்தகைய வாய்வுகள் உடலின் உள் சேர்க்கை பலவற்றில் சேர்ந்து பல்வேருன பாதிப்புக்களைத் தருகின்றன. இதனுல் இவை மனிதர்களின் ''வாதனே'' என்று அழைக்கப்படுகின்றன.

## 1. மந்த வாய்வு

இந்த நோயாளிக்கு பசிப்பது போல தோன்றும்; கண்டதெல்லாம் தின்ன ஆசை தோன்றும். ஆனுல் எதையுமே தின்ன முடியாது. தின்ருலும் சீரணிக்காது. தின்ற பொருளை வாந்தியெடுத்தால் நல்லது என்ற வாதனே தோன்றும்.

மலச் சிக்கலும், வயிற்று வலியும் ஏற்படும். சில சமயம் மலத்துடன் இரத்தமும், சீதமும் விழும், உடல் வெளுப்பாகத் தோன்றும்.

## 2. குண்டல வாய்வு

வாய்வு அதிகரித்து இரைச்சல் தரும். வயிற்றில் வாயு திரளும். பின் வாயு கலேந்து, உடல் முழுதும் பரவி நோவு தரும். பசி அடங்கிவிடும்.

## 3. குடல் வாய்வு

குடலில் வாய்வு புரண்டு இரைச்சல் தரும். பசி மறைந்து மந்திப்பு ஏற்படும்.

### 4. அத்தரு வாய்வு

சீரணிக்க முடியாது. சாப்பிட்டபடி கழிச்சல் ஏற்படும். புளிச்ச ஏப்பம் வரும். வாய்வு பரிந்து கொண்டிருக்கும்.

### 5. துடி வாய்வு

உடல் முழுதும் வாய்வு பரவி சில இடங்களில் துடிதுடிப்பு ஏற்படும். அவ்வாறு துடித்த இடத்தில் வேதனை ஏற்படும்.

### 6. அண்ட வாய்வு

வாய்வு குடலில் தங்கி நரம்பின் வழியாக கீழ் இறங்கிச் செல்லும். ஆண்களுக்கு விரையில் ஒன்றில் இறங்கி வீக்கம் தரும். விரை நரம்பு புடைத்து வலி உண்டாகும். விரை மேல்நோக்கி உள்வாங்கி வேதனை விளைவிக்கும்.

## சுர நோய்கள்

பித்தம், கபம், வாய்வு ஆகிய மூன்றும் சேர சுர நோயாக வளர்ந்து விடுகிறது என்று ஏற்கனவே கூறப்பட்டது. சுர வகையில் சிலவற்றின் குறிப்புகள்:

**1. வாதசுரம்:** உடல் நடுக்கமும், அளைச்சலும் காணும். இரு விலா எலும்புகளும், தலையும் வலிக்கும். உடல் குளிர்ந்து சுரம் காயும். இரண்டு கால்களும் குளிரும்.

**2. பித்த சுரம்:** கடுமையான சுரமும் புலப்பமும் காணும். பிதற்றல், நெஞ்செரிவு ஏற்படும், நா உலரும், கசக்கும்.

**3. சிலேத்ம சுரம்:** உடலில் அனல் மிகுந்து காணும். சிரசில் நீர் கொண்டு தலை வலி ஏற்படும். கடுமையான சுரம், இருமல், கோழை வரும். நாசிகளில் நீர் வடியும்.

**4. வாத சிலேத்ம சுரம்:** சுரம் மிகுதியாகும். குளிர் காணும். வாய் பிதற்றும். பல் கடிக்கும். காதடைக்கும். இருமல் வரும். இரத்தம் விழும்.

**5. சன்னி வாத சுரம்:** மார்பு, நெற்றி, கழுத்து வியர்க்கும். விக்கலும், பிதற்றலும் வரும். வயிற்று வலியும், கழிச்சலும் ஏற்படும்.

**6. விஷக் காய்ச்சல்:** ஒரு புறம் குளிரும், ஒரு புறம் காயும். உடலில் விஷம் ஏறி நோவு தரும்.

## பீனிசம் நோய் வகைகள்

**1. வாத பீனிசம்:** நாசி துவாரங்களில் வறட்சி ஏற்பட்டு, நீர் வடியும். சளி பழுத்த பின் நாற்றம் தரும்.

**2. பித்த பீனிசம்:** நாசி வழியே மஞ்சள் நிறமாக சளி வடியும். சளி புலால் நாற்றம் தரும்.

**3. சிலேத்ம பீனிசம்:** நாசி மாறி மாறி அடைக்கும். நாசியில் நீர் கசியும் நாற்றம் தரும். நாசியில் சளி வரும். நாசியில் குத்தல் வலி ஏற்படும், கண்களில் பீளை சாடும்.

**4. நீர் பீனிசம்:** விஷ பித்தமும், வெட்டையும் அதிகரித்து சிரசில் ஏறி நாசியில் நீர் வடியச் செய்யும். நாசியில் அரிப்பு ஏற்படும். பிடரி, முகம் இவற்றில் ஒருவிதமான ஊர்தல் போன்ற உணர்ச்சி

இருக்கும். தலை கனக்கும். தும்மல் தொடர்ந் திருக்கும்.

**5. இரத்த பீனிசம்:** வெட்டையின் காரணமாக கபாலம் புண்ணுகி நாசி வழியாக இரத்தம் விழும். தலை வலி ஏற்படும்.

**6. சீழ் பீனிசம்:** வெட்டையும், பித்தமும் கபாலத்தில் அதிகரித்து கபாலம் முதல் நாசிவரை புண்ணுகிவிடும். நாசிகளில் சீழ் போல் வடியும்.

**7. சிரும் பீனிசம்:** நாசி வழியே சிருய் போல் வெளிவரும். சீழ் திரண்டு விழும். நாற்றம் தரும். விடாத தலை வலி இருந்து வரும்.

**8. மூலப் பீனிசம்:** நாசியில் சதைபோல் வளர்ந்து வரும்.

**9. கண்ட பீனிசம்:** நாசியில் சுண்டைக்காய் போல் சதை வளர்ந்து அடைத்து வரும்.

## பிரமியம்

கெட்ட, ஒழுங்கீனமான நடத்தைகளால், ஒழுக்கத் தவறுகளால் மூலத்தில் அக்கினி போன்று சூடு அதிகரித்து அதன் விளைவாக தாது கெட்டு விடுகிறது.

புரிமியங்கள், சதை அடைப்பு, வெள்ளை, வெட்டை, கிரந்தி, சூலை, அரையாப்பு, பவுந்திரம், பிரமேகம், கல்லடைப்பு, நீரழிவு போன்ற நோய்கள் ஏற்பட ஏதுவாகின்றன.

**1. இரத்த பிரமியம்:** நீர்த்தாரையில் குத்தல் வரும். கடுப்புடன் இரத்தம் விழும்.

**2. சுக்கிலப் பிரமியம்:** நீர்த்தாரையில் குத்தல் வரும். சுக்கிலமும், நீரும் சேர்ந்து இறங்கும்.

**3. சீழ் பிரமியம்:** நீர் கடுத்து இறங்கும். உடல் மெலிவு ஏற்படும்.

**4. கண்ட மாலை:** கண்டத்தைச் சுற்றிலும் தடித்துப் புண்ணாகி, சீழ் கட்டி புரையாகும்.

## சன்னி நோய்

**1. அந்தக சன்னி:** கடுமையான சுரம் காயும்; வாய் நீர் வடியும். விக்கல், வாந்தி, இருமல், தாகம், பிரமை, நடுக்கல், ஆராட்டம் காணும். தலை நடுங்கும். கண் சிமிட்டும், பிதற்றும்.

**2. சீதாங்க சன்னி:** உடல் குளிரும், நடு நடுங்கும். வயிறு பொருமி கழியும். விக்கல், வாந்தி, குரல் கம்மும். இருமல், இளைப்பு, பெருமூச்சு காணும். நெஞ்சில் கபம் அடைக்கும். அடிக்கடி எழுந்து விழும். மரண அபாயம் ஏற்படும்.

**3. பிரலாப சன்னி:** சுரம் காயும். விக்கல் எடுக்கும். பிதற்றும். அலறி-அலறி விழும். தலை சுற்றும்.

**4. வாத சன்னி:** உடல் காயும், வியர்க்கும். பயந்து வெருளும். நாவு கறுக்கும். கண் சொருகும். மல-சலம் கட்டும். குளிர்ச்சி பிறக்கும்.

**5. பித்த சன்னி:** உடல் சுழிக்கும். புருவம் நெறிக்கும். கண் சிவக்கும். வாய் கோணும். பிதற்றலும் புலம்பலும் ஏற்படும்.

**6. பயித்திய சன்னி:** அடிக்கடி எழுந்து ஓடும். நிலை புரண்டு வாய்விட்டலறும். உடையைக் கிழித்தெறியும்.

**7. சுப சன்னி:** உடையைக் கிழிக்கும். வசை மொழியும். எதிர்ப்பட்டார் முகத்தில் உமிழும்.

**8. சிலேத்ம சன்னி:** நெஞ்சில் கபம் கட்டி இரையும். நாவெழுக்கும். மயங்கி விழும்.

**9. முகவாத சன்னி:** கண், புருவம், காது இவற்றில் குத்தல் உண்டாகும். முகத்தையும், வாயையும் ஒரு பக்கம் இழுக்கும்.

**10. கபால சன்னி:** பிடரி வலி காணும். தலை, காதில் குத்தும். திமிர் ஏறும். முகம், மூக்கு, கண் ஆகியவை சிறுத்துக் காட்டும்.

## கிராணி நோய்

உடலில் பித்தம் மிகுந்து, வாதமும்-பித்தமும் சூடேறி, இம்மூன்றுடன் வாய்வு சேர்ந்து விட்டால் அதன் விளைவாக மூன்றுவிதமான கழிச்சல் ஏற்பட்டு விடுகிறது.

அதேபோன்று மேகம், மூலம், வாய்வு மிகுதி ஏற்பட்டாலும் மூன்றுவிதமான கழிச்சல் ஏற்படலாம்.

அவ்வாறு ஏற்படும் மூன்றுவிதமான கழிச்சல் தான் ''கிராணி'' கழிச்சல் என்று சொல்லப்படுகிறது.

**1. மூல கிராணி:** கீழ் வயிற்றில் கடுத்து, உளைந்து, ரத்தமாகச் கழியும். உறுப்புத் தள்ளும்.

**2. வாத-மூல கிராணி:** சீதம், ரத்தம் விழும். தொப்பிலில் வலி ஏற்படும்.

**3. பித்த-மூல கிராணி:** மலம் சிறுத்துக் கழியும். அதிக நாற்றம் ஏற்படும்.

**4. சிலேத்ம-மூல கிராணி:** காற்றுப் பரியும். இரத்தமாகவும், சீதமாகவும் கழியும்.

**5. வாய்வு கிராணி:** உணவு செரியாது. வயிறு பொருமி இரைச்சல் தரும். புளித்தேப்பம் வரும். புறங்கால் வீங்கி வற்றும்.

**6. சங்கிர கிரானி:** வயிறு ஊத்தம் ஏற்படும். சீதம் போலவும், நெய் போலவும் பலவிதமாய்க் கழியும்.

**7. இரத்த கிரானி:** அடி வயிற்றில் வலி ஏற்படும். நெஞ்சு எரியும். இரத்தமாயும், சலமாகவும், தண்ணீர் போலவும் கழியும். அபானம் தடுக்கும். கால், கை நோவு ஏற்படும்.

## பித்த நோய்

பித்த வரட்சி, இரத்த பித்தம், பித்த வெறி என்று கூறப்படுகிறது.

**1. பித்த வரட்சி:** தலை கனத்து, உடல் உலரும். அபானத்தில் எரிச்சல் ஏற்படும். புத்தி தடுமாறும். மறதி வரும்.

**2. இரத்த பித்தம்:** உடல் காந்தும்; மூக்கு, வாய்—இவற்றிலிருந்து இரத்தம் விழும்.

**3. பித்த வெறி:** பித்தம் விஷமாகி உடலில் விஷ பித்தமாகி பாய்ந்து இரத்தத்தைக் கெடுத்து

விடும். இதனுல் இரத்தம் விஷமாகி சிரசில் பாயும். இதன் விளைவாக பைத்தியம் ஏற்படும்.

மூளைக் கோளாறினுல் ஏற்படும் பைத்தியமும், இரத்தம் விஷமாகி அதன் காரணமாக ஏற்படும் பைத்தியமும் ஒன்றல்ல.

பித்த வெறியால் ஏற்படும் பைத்தியமும், மூளை நரம்புகள் பாதிப்பால் ஏற்படும் பைத்தியமும் ஒன்றல்ல. வெவ்வேருனது.

## சிலேத்ம நோய்

மூலத்தில் அக்கினி அதிகரித்து அதனுல் கபாலம் பாதிப்பு ஏற்படும்பொழுது இரத்தம் வற்றுகிறது. தாது கெடுகிறது. அதன் விளைவாக நெஞ்சில் கபம், இருமல், இளைப்பு உண்டாகிறது.

அஸ்தியில் சூடேறி இரத்தம் வற்றி பித்தம் அதிகரித்துவிட்டால் நெஞ்சில் கபமும், இருமல் ஈளையும் உண்டாகும். உடல் வற்றி வரும். உணவு செல்லாது. ஆரோசியம் ஏற்படும். நெஞ்சில் பள்ளம் விழும். விலா, தொண்டை ஏரிச்சல் காணும்.

தவிர பித்தம் மேலும் அதிகரிக்க உள்ளங்கை எரிச்சலும், கடுப்பும் ஏற்படும். இருமல், இளைப்பு அதிகரிக்கும். வாந்தியும், வயிறு கழிச்சலும் கூட ஏற்படும்.

க்ஷய ரோகம் அல்லது காசம் என்று இதனைத் தெரிந்துகொள்ள வேண்டும். தவிர காசத்தில் அக்கினி அதிகரித்துவிட்டால் நெஞ்சு புண்ணுகி விடும். கபத்தோடு கலந்து இரத்தம் விழும்.

வாந்தியிலும் இரத்தம் விழும். நாசி அனல் போல் எரியும். வாயு அதிகரித்து வயிறு நோகும்.

காசத்தில் மூன்று வகை உண்டு: 1. மந்தார காசம், 2. இரத்த காசம், 3. சுவாச காசம்.

**1. மந்தார காசம்:** முகம், காது ஊரும். நாசியில் கரகரப்பு இருந்து வரும். நெஞ்சில் கபமும், இருமல், ஈளையும் வரும். மந்தார காலங்களில் நோய் மிகுதியாகும்.

**2. இரத்த காசம்:** இருமலும், வாயின் வழியாக அடிக்கடி இரத்தமும் வரும். நா வழுவழுக்கும். இரத்த வாடை நாறும்.

**3. சுவாச காசம்:** எப்பொழுதும் சுரம் காணும். மாலையில் சுரம் அதிகமாகும். குளிர், இருமல் வரும். தலை வலியும், வயிற்றுப் பொருமலும் வாந்தியும் ஏற்படும். புறங்கால் அதைக்கும்.

## வாத நோய்

இரத்தத்துடன் துர்நீர் சேர்ந்து இரத்தம் கெடுகிறது. கெட்ட இரத்தம் நரம்பின் வழியாக ஓடி வருவதால் நரம்புகள் பலவீனமாகி கேடு அடைகின்றன. இதனால் நரம்புத் தளர்ச்சி ஏற்படுகிறது. நரம்பின் மூலமாக துர்நீர் தசையில் ஊறிவருகிறது. இதனால் தசையில் வாய்வு பெருகிவிடுகிறது. தசையின் வழியாக வாய்வு உடல் முழுவதும் பரவிவிடுகிறது. அவ்வாறு பரவி வரும் வாய்வு வேதனை தருகிறது. உடல் வேதனை தருவதால் பாதிக்கப்படும் அங்கத்தைக் கூறி வாதநோய் பெயர்

கூறி அழைக்கப்படுகிறது (உதாரணமாக—தசை வாதம், முழங்கால் வாதம், குதி வாதம் போன்று).

உடல், கை, கால் போன்ற அங்கங்கள் குடைந்து அசதி, சோம்பல், தூக்கம் ஆகியவை ஏற்பட்டால் வாதம் ஆகும். உடலில் பல இடங்களில் பரவி துடித்து வேதனை தந்தால் துடிவாதம் ஆகும். உடல் உளைந்து நடுக்கம் ஏற்பட்டால் நடுக்கு வாதம் ஆகும். உடலில் ஒரு புறமாக காலும், கையும் வணங்காமல் போய்விட்டால் பக்கவாதம் ஆகும்.

## குன்ம நோய்

உடலில் பித்தநீர் மிகுதியாகிவிட்டால் குடலில் புரட்டல் ஏற்படும். ஏப்பம் வரும். அதனுல் அக்கினி மந்தம் ஏற்பட்டுவிடுகிறது. உடனே பித்த நீர் அக்கினி மந்தத்தைப் பற்றிக்கொண்டு மேலும் அதிகரித்து வயிற்றில் சகிக்க முடியாத வலியை உண்டாக்கிவிடுகிறது. இதனை குன்மம் என்று தெரிந்துகொள்ள வேண்டும். குன்மம் பலவகைப் படும்.

**1. வாத குன்மம்:** ஈரல், நெஞ்சு வற்றி வயிறு ஒரு பக்கத்தில் எரிச்சல், உளைச்சல் தரும். சந்து, கால், கை, பொருத்துக்கள் உளையும். இரவில் வேதனை அதிகமாகும். நித்திரை வராது.

**2. பித்த குன்மம்:** வயிறு மந்தித்து வலிக்கும். நெஞ்சு எரியும். வாய் நீர் ஊறும். வாந்தி வரும். வாய் கசக்கும். மலம் கடுத்திறங்கும். மஞ்சளாக நீர் இறங்கும்.

3. சிலேத்ம குன்மம்: வாய் நீர் ஒழுகும். வாந்தி வரும். இருமல், விக்கல், கொட்டாவி, தும்மல், வயிற்று இரைச்சல் ஏற்படும். கபம் விழும்.

4. வலி குன்மம்: வயிறு வலிக்கும். நெஞ்சு எரியும். அன்னம் செல்லாது.

5. சத்தி குன்மம்: வாய்வு அதிகரித்து வயிறு பொருமும். வாந்தி வரும். நெஞ்சு எரியும். புளிச்ச ஏப்பம் வரும்.

6. எரி குன்மம்: எப்பொழுதும் வயிறு இரையும். குடலைப் புரட்டிப் பொருமும். ஏப்பம் வரும். தலை கனத்து வலிக்கும். உடல் வியர்க்கும்.

## மேக நோய்

தாயின் கர்ப்பத்திலிருந்து குழந்தையின் இரத்தம் மூலமாக வளர்ந்துள்ள மேக நோய்கள் ஐந்து வகையானவை.

இளம் பருவத்தில் ஒழுக்கமில்லாமல், உடல் சுகம் என்று நினைத்து தகாத பெண்களிடம் உடல் உறவு வைத்ததால் வளர்ந்துள்ள மேக நோய்கள் ஒன்பது வகையானவை.

நோயின் தன்மை அறியாது கண்ட மருந்துகளை, தகாத உணவுப் பொருள்களை உட்கொள்ளுவதில்—அதன் விளைவாக ஏற்பட்டு வளர்ந்துள்ள—பாஷாண பாதிப்பால் விளைந்துள்ள மேகநோய்கள் ஏழு வகையானவை.

இவ்வாருக இருபத்தொரு வகையான மேக நோய்கள் ஆண், பெண் இருபாலாரையும் பாதிக்கின்றன.

அவ்வாறு பாதிக்கப்பட்டு மேகநோயால் வாதனைப்படுபவர்களின் உடையில் வெளுப்பான கரைபடுமாஞல் வாதமேகம் என்றும், மஞ்சள் போல் கரைபடுமாஞல் பித்தமேகம் என்றும், மயில் நிறம் போல் கரைபடுமேயாஞல் சிலேத்ம மேகம் என்றும் தெரிந்துகொள்ளலாம்.

மேக நோய் உள்ளவர்களின் உடல் நாளுக்கு நாள் மெலிந்து வரும். உடல் வெளுத்து உருகி வரும். கை, கால், முகம் காந்தல் ஏற்படும். நெஞ்சு உலர்ந்து வரும். உணவு செல்லாது. சதா காலமும் தூக்க உணர்வு இருந்து வரும். நகம் செத்து விழும். கண்கள் வெளுத்து காணும்.

**1. வாதப் பிரமேகம்:** வாதப் பிரமேகம் பாதிக்கப்பட்டவர்களின் சிறுநீர் இறங்கும் பொழுது நுங்கு போலும், நெய் போலும், மூளை போலும் நீரில் கலந்து விழும். வாதப் பிரமேகத்தில் ஐந்து வகைகள் உள்ளன.

**2. பித்த பிரமேகம்:** பித்த பிரமேகம் பாதிக்கப்பட்டவர்களின் சிறுநீர் இறங்கும் பொழுது மஞ்சள் போலும், நீலம் போலும், சாம்பல் கழுவின அழுக்கு நீர் போலும் காணும். இந்த நீரை நெருப்பில் காய்ச்சிஞல் தீபம் எரிக்கும் எண்ணெய் போல் மாறும். பித்த பிரமேகத்தில் ஆறு வகைகள் உள்ளன.

**3. சிலேத்ம பிரமேகம்:** சிலேத்ம பிரமேகம் பாதிக்கப்பட்டவர்களின் மூத்திரம் இறங்கும் பொழுது பால் போலும், தயிர் போலும், சர்க்கரைப் பாகு போலும் நீரில் காணப்படும். இந்த நீரைக் காய்ச்சினுல் துணியில் தோய்த்து தீபம் எரிக்கும் எண்ணெய் போல் மாறும். சிலேத்ம பிரமேகம் பத்து வகைகள் உள்ளன.

## நீரிழிவு

'நீரிழிவு' பற்றிய நோயை சிறுநீர் பரிசோதனை செய்து காண முடியும். 'நீரிழிவு' நோயில் இருபத்து நான்கு வகைகள் உண்டு. இருப்பினும் அவற்றில் ஏழு பிரிவுகள்தான் பிரதானமானவை.

**1. வாத நீரிழிவு:** நோயாளியின் நீர் மாம்பூ அல்லது குங்குமப்பூ போல் ஒருவித நாற்றம் இருக்கும். புளிப்பு, அல்லது கைப்பாக இருக்கும். வாத நீரிழிவு மூன்று வகைப்படும்.

**2. பித்த நீரிழிவு:** நோயாளியின் நீர் மல்லிகை, பானக்கம், உப்பு போன்ற நாற்றம் இருக்கும். கைப்பு, கரிப்பு, எரிப்பாயிருக்கும். பித்த நீரிழிவு மூன்று வகைப்படும்.

**3. சிலேத்ம நீரிழிவு:** நோயாளியின் நீர் சாணம், தாழை, உதிரம், எலுமிச்சம்பழம் போன்ற நாற்றம் இருக்கும். இனிப்பாக இருக்கும். சிலேத்ம நீரிழிவு நான்கு வகைப்படும்.

**4. வாத-பித்த நீரிழிவு:** நோயாளியின் நீர் மஞ்சள், அலரிப்பூ, பால், மூளை போன்ற நாற்றம்

இருக்கும். புளிப்பு, கசப்பு, கைப்பு இருக்கும். வாத-பித்த நீரிழிவு நான்கு வகையாகும்.

5. பித்த-வாத நீரிழிவு: நோயாளியின் நீர் சந்தனம், கோழி எச்ச நீர் நாற்றம் இருக்கும். துவர்ப்பு, உவர்ப்பாக இருக்கும். பித்த-வாத நீரிழிவு இரண்டு வகைப்படும்.

6. சிலேத்ம-வாத நீரிழிவு: நோயாளியின் நீர் மிகுந்த நாற்றமாகவும், புளிப்பாகவும் இருக்கும். சிலேத்ம வாத நீரிழிவு ஐந்து வகைப்படும்.

7. சிலேத்ம-பித்த நீரிழிவு: நோயாளியின் நீர் சுண்ணும்பு, செண்பகப்பூ போன்ற நாற்றம் இருக்கும். எலும்பு அரிக்கும், கைப்பு, புளிப்பு, எரிச்சலிருக்கும். சிலேத்ம-பித்த நீரிழிவு மூன்று வகைப்படும்.

## சூலை நோய்

சூலைநோய்களில் பதினெட்டு வகைகள் உண்டு.

1. வாத சூலை: நோயாளியின் உடல் கனத்து வரும். திமிர்பிடித்து பிடரியையும், பாதத்தையும் பற்றி இழுக்கும். கை, கால், விரல்கள், மொளி பொருத்துக்கள் வீங்கும். குளிர் காலத்தில் நோயின் பாதிப்பு அதிகமாகும்.

2. வாத-வாய்வு சூலை: பிடரி, கழுத்து, முட்டு, நெஞ்சு விலா ஆகியவற்றில் குடைந்து குத்தும். பெரும் வேதனை தரும். உடல் புண் போல உலையும். விரல்கள் வீங்கும். உடல் வியர்த்து குளிரும்.

3. பித்த சூலை: உடல் வரண்டு போய் கடு கடுக்கும். கை, கால் பொருத்துக்கள் வீங்கி உலையும். வாய் கசக்கும். தலைவலிக்கும்.

4. சிலேத்ம சூலை: கை, கால், நெஞ்சு குத்தி குடையும். இருமி கபம் கட்டும்.

5. வாத-பித்த சூலை: கை, கால் இணைப்புக் களில் வீங்கி உடலில் தடிப்பு ஏற்பட்டு புண்ணுகும். மேலும் உடல் வீங்கி நரம்பு பார்வைக்குத் தெரியு மாறு மினுமினுக்கும். நாவு குழலும். காது கேளாது. உடல் சலவை காணும். இந்நிலையில் சன்னிவாத சூலையாகிவிடும்.

6. கிரந்திச் சூலை: மொளியின் பொருத்துக் களில் வீக்கம் ஏற்பட்டு வெடித்துவிடும். அதிலிருந்து சீழும் சலமும் வடியும். நீர் கடுத்து இறங்கும்.

7. மங்கிஷச் சூலை: அசைவு தரும் மொளி முதலான அங்கங்கள் வீங்கி வெடித்து நாற்றம் எடுக்கும். உடல் வற்றி வரும்.

8. நீர்ச் சூலை: புறங்காலில் அரிப்பும் வீக்கமும் ஏற்படும். வாயில் கொப்புளம் போல் திரண்டு உடையும்.

9. விஷ நீர் சூலை: உடலில் விஷ நீர் பரவி எரிச்சல் உண்டாகும். விரல்கள் வீங்கும். மொளிகள் வீங்கி வெடிக்கும். எலும்புகளில் குத்தல் ஏற்படும்.

10. விஷ-பித்த சூலை: விழிகள், உதடு, பல், நாவு—கருத்துவிடும். உடல் வீங்கி பொருத்துக் களிலும் வீக்கம் ஏற்படும்.

11. வாத-பாண்டு சூலே: முகம், வயிறு, முதுகு, துடை, புறங்கால் வீங்கி அசைவுகளில் மோது கட்டும்.

12. பித்த-பாண்டு சூலே: வயிறு, துடை இவற்றில் வீக்கம் ஏற்படும். பொருத்துக்களில் குத்தெடுக்கும். கண், முகம், நீர், மலம், கருக்கும் அல்லது மஞ்சளாகும்.

13. விஷ-பாண்டு சூலே: உடலில் ஒரு பக்கம் வீக்கம் ஏற்பட்டு உளேச்சல் தரும், கண் வெளுக்கும். தாகம் மிகும். பெருமூச்சு வரும்.

14. சுரச் சூலே: உடலில் சுரம் மிகுந்து கால், கை, மொளி, குறுக்கு—இவற்றில் குத்தல் தரும். விரல்கள் விறுவிறுத்து வலி ஏற்படும்.

15. அண்ட-வாயு சூலே: அண்டத்தில் (பீஜம்) வாய்வு ஏற்பட்டு பொருமி வலி மிகும்.

16. அந்தர-வாயு சூலே: குறுக்கு, பிடரியில் வலி ஏற்படும். சுரம் காயும். ஒருபக்கத்து விரையில் வாய்வு இறங்கி மேல் நோக்கி ஏறும்.

17. சுக்கில-பிரமேகம்: உடலில் உஷ்ணம் அதிகமாகி நீர்த்தாரையில் இரத்தமும் சீழும் இறங்கும். உடல் குத்தி குடையும். கை, கால், மொளிகளில் வீக்கம் ஏற்படும். சுக்கில பிரமேகம் சூலே நோய் வகையேயாகும்.

18. சன்னிவாத சூலே: வாத-பித்த சூலேயின் மிகுதியால் ஏற்படுவதே சன்னிவாத சூலே.

# மருந்து சுத்தி முறை

நாடி பார்த்து, நோயின் கூறு தெரிந்து, உடல் பரிசோதனை செய்து, நோய் என்னவென்று தெரிந்து மருந்து கொடுக்க முன்வரவேண்டும். அவ்வாறு கொடுக்கப்படும் மருந்துகள்—பஸ்பம், செந்தூரம், மாத்திரை, குளிகை, லேகியம், தைலம், மை, நெய், கஷாயம், கியாழம் போன்றவையாக இருக்கலாம்.

இவைகளில் சேர்க்கப்படும் தாதுக்கள், ரசம், பாஷாணங்கள், மூலிகைகள், முறையாக சுத்தி செய்யப்பட வேண்டும். மருந்துகளில் சேர்க்கப் படும் மூலப் பொருள்கள் அல்லது சரக்குகள் முறையாக சுத்தி செய்யப்படாவிட்டால் அதில் உள்ளடங்கிய விஷப்பொருள்கள் நோயாளியின் உயிருக்கே ஆபத்தை விளைவித்து விடும்.

சுத்தி செய்யப்படாத மருந்துகள் ''பச்சை வேட்டு மருந்துகள்'' என்று சாதாரணமாகச் சொல்லப்படுகிறது. மருந்துச் சரக்கில் உள்ள— தீமைதரும் விஷச்சத்துக்களைப் போக்குவதுதான் ''சுத்தி முறை'' என்பதாகும்.

சித்தர்கள் கூறிய 'சுத்தி முறை' பல சந்ததி காலம் அனுபவத்தில் செய்யப்பட்டு நோயாளி களுக்கு எந்தவித தீமையும் விளைவிக்காது, பிணி தீர்த்து வந்துள்ளது. சாத்திர உண்மையும், அனுபவப் பயனும் கலந்துள்ள சுத்திமுறை:

1. தங்கம், வெள்ளி, தாமிரம், நாகம், வங்கம், சத்து, லோகம்—என்று ஏழு விதமான தாதுப்பொருள்கள் இருக்கின்றன.

இவற்றில் தங்கம், வெள்ளி, தாமிரம், லோகம் (இரும்பு)—இவற்றை லேசான தகடாய்த் தட்டிக் கொண்டு நெருப்பில் காய்ச்சி, நல்லெண்ணெய், பசுவின் மோர், பசுவின் மூத்திரம், புளித்த காடி, கொள்ளு அவித்த நீர் ஆகிய இவை ஒவ்வொன்றி லும், ஏழேழு தடவைகள் தோய்த்து எடுக்க சுத்தி யாகும்.

2. நாகம், வங்கம், சத்து (காரீயம், வெள்ளீயம், செம்பு) இம்மூன்றையும் சுத்தி செய்ய —இவற்றைக் காய்ச்சி உருக்கி மேலே கூறிய பிரகாரம் ஒவ்வொன்றிலும் ஏழேழு தடவை ஊற்றி எடுக்க சுத்தியாகும்.

3. காரீயம், வெள்ளீயம் இவ்விரண்டையும் உருக்கி எருக்கன்பாலில் மூன்று தடவை ஊற்றி எடுக்க சுத்தியாகும்.

4. காரீயத்தை உருக்கி கற்றாழைச் சாற்றில் அல்லது திரிபலாதி கஷாயத்தில் (கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்) ஏழு தடவைகள் ஊற்றி எடுக்க சுத்தியாகும்.

5. செம்பு சுத்திமுறை: செம்பினை லேசான தகடாக்கி கொண்டு நெருப்பில் பழுக்கக் காய்ச்சி நல்லெண்ணெய், பசுவின் மோர், பசுவின் மூத்திரம் இவைகளில் ஏழு தடவைகள் தோய்த்து எடுத்து சுத்தி செய்தால் நோயாளியின் வாந்தியைக் கட்டுப் படுத்தும் மருந்தாக இதனையே உபயோகிக்கலாம்.

அதே போன்று புளித்த காடி நீர், கொள்ளு அவித்த நீர் இவற்றில் சுத்தி செய்தாலும் வாந்தியைக் கட்டுப்படுத்தும் மருந்தாக இதனை உபயோகிக்கலாம்.

கள்ளிப்பால், பசுவின் பால் இவ்விரண்டில் சுத்தி செய்த செம்பினை அசதியைப் போக்கப் பயன் படுத்தலாம்.

பசுவின் நெய்யில், பசவின் பாலில் சுத்தி செய்த செம்பினை தினவை நிறுத்த உபயோகிக்கலாம்.

புளி, எலுமிச்சம்பழ சாற்றில் சுத்தி செய்த செம்பினை தாபத்தை நிறுத்த உபயோகிக்கலாம்.

திராக்ஷை ரசம், தேன் இவ்விரண்டில் சுத்தி செய்தசெம்பினை இந்தியம் கட்ட உபயோகிக்கலாம்.

தயிர், காட்டுக் கருணைச் சாற்றில் சுத்தி செய்த செம்பினை மலம் கட்ட உபயோகிக்கலாம்.

மேற்கூறியவாறு செம்பினை மருந்தாக உப யோகிப்பதுடன் செம்பு சேர்ந்த மருந்து எந்த நோய்க்காக பிரதானமாகக் கொடுக்கப்படுகிறதோ அதற்கு ஏற்றவாறு செம்பு சுத்தி செய்யும் முறை இருக்க வேண்டும்.

6. லோகம் என்ற தாதுப் பொருள் என்ருல் இதில் காந்தம், எஃகு, இரும்பு என்ற மூன்று பொருள்கள் அடங்கும், இவற்றினை எலுமிச்சம்பழச் சாறு, புளித்த காடி, புளித்த மோர் இவை ஒவ் வொன்றிலும் ஏழுதடவைகள் காய்ச்சி தோய்த்து எடுத்து சுத்தி செய்யவேண்டும். அதன் பின்னர் இவற்றினை திரிபலாதிக் கஷாயத்திலும் (கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்) ஏழுதடவைகள் தோய்த்து சுத்தி செய்ய வேண்டும்.

சுத்தி முறையில் அரைகுறையாக செய்வது கூடாது. செய்யும் மருந்துக்கு வல்லமையும் சித்தியும் தருவது சுத்திமுறை என்பதேயாகும்.

7. மண்டூரம் (சிட்டம்): உலையில் வைத்து சிவக்க காய்ச்சி பசுவின் மூத்திரத்தில் ஏழு தடவைகள் தோய்த்து எடுக்க சுத்தியாகும்.

8. உபதாதுப் பொருள்கள்: நிமினை, மயில் துத்தம், தாளகம், நீலாஞ்சனம், அப்பிரகம், மனேசிலை, பால்துத்தம் ஆகிய ஏழு பொருள்கள் உபதாதுப் பொருள்களாகும்.

இவற்றில் நிமினையை உடைத்து மெல்லிய துணியில் கிழி கட்டி ஆட்டு மூத்திரத்தில் பன்னிரண்டு மணி நேரமும், புளித்த காடியில் பன்னிரண்டு மணி நேரமும் வேக வைத்து எடுக்க சுத்தியாகும்.

9. மயில் துத்தம்: இவற்றை தயிர் விட்டு அரைத்து பில்லை செய்து உலரவைக்க வேண்டும். அதன் பின் ஓட்டில் வைத்து சூடுபடுத்தினல் சுத்தி யாகும்.

மயில் துத்தம், புரு மலம் இரண்டையும் சமனெடை எடுத்து அவற்றிற்கு பத்து மடங்கு வெங்காரம் எடுத்து இந்த மூன்றினையும் கல்வத்திலிட்டு அரைத்து உருண்டையாக்கி நிழலில் உலர்த்தவேண்டும். பின் ஓட்டில் வைத்து சிலைமண்ணால் இறுகச் சுற்றி நெருப்பில் சில நிமிடங்கள் வைக்கவேண்டும். அதன் பின்னர் உருண்டையை வெளியில் எடுத்து தயிரால் அரைத்து ஓட்டில் வைத்து இறுக சிலைமண் சுற்றி புடமிட வேண்டும். பின்னர் அதை எடுத்து தேனில் அரைத்து முன்பு செய்ததுபோல் புடமிட வேண்டும். மயில் துத்தம் சுத்தியாகும்.

மயில் துத்தம் விஷப் பொருள் கொண்டிருப்பதால் இம்முறையில் சுத்தம் செய்வதே உயர்ந்ததாகும்.

*10.* தாளகம்: இதை மெல்லிய துணியில் கிழி கட்டி ஆட்டின் சிறுநீரில் அல்லது புளித்த காடி நீரில்—அதாவது கொதி ஆவியில் அவிக்கலாம். டோலா யந்திரத்தில் எரிக்க சுத்தியாகும். இம்முறை எளிதானது.

கிழி கட்டிய தாளகத்தை சுண்ணும்பு நீர், பூசணிக்காய் நீர், ஆவின்பால், அரசம் பட்டைகியாழம் ஆகியவற்றில் மூன்று நாட்கள் ஊறவைத்து பின்னர் அவற்றில் அவித்து எடுக்க சுத்தியாகும்.

*11.* அஞ்சனம்: இவற்றில் ஐந்து வகைகள் உண்டு. இவற்றை நன்ருக சூரணித்து எலுமிச்சம்

பழச்சாறு விட்டு அரைத்து ஒரு நாள் ரவி புடம் போடவேண்டும். அதாவது சூரிய வெயிலில் 24 மணி நேரம் காயவைக்க வேண்டும். அஞ்சனம் சுத்தியாகும்.

12. அப்பிரகம்: இவற்றை பசுவின் சிறுநீரில் கலந்து வற்றக் காய்ச்ச வேண்டும். அதன் பின்னர் அப்பிரகத்தை கிழிகட்டி நெல் ஆவியில் அவிக்க வேண்டும். பின்னர் காடியில் கரைத்துவிட வேண்டும். அதன் பின் தெளியவைத்து அப்பிர கத்தை எடுத்து உலரவைக்க சுத்தியாகும்.

13. மனோசிலை: இதை லேசாக உடைத்து மெல்லிய துணியில் கிழி கட்டி, ஆட்டின் சிறுநீரில் டோலா யந்திரத்தில் எரிக்க சுத்தியாகும். அதே போல் உழுந்து அவித்த நீரிலும் எரிக்கலாம்.

மனோ சிலையை கல்வத்திலிட்டு பசுவின் மோர் விட்டு நன்ருக அரைக்க வேண்டும். இவ்வாறு மூன்று மணி நேரம் அரைத்த பின்பு சுத்தியாகும்.

14. பால் துத்தம்: இவற்றைப் பொடி செய்து கிழி கட்டி நீராவியில் அவித்து எடுக்க சுத்தியாகும்.

15. மடல் துத்தம் (கபரி): இதைப் பொடித்து பசுவின் நெய்யில் கலந்து, நெய் சுண்டும் வரை எரிக்க சுத்தியாகும்.

16. துத்தம்: இவற்றைப் பொடி செய்து கிழி கட்டி அமுரியில் இருபத்தொரு மணி நேரமும், பசுவின் சிறுநீரில் ஆறு மணி நேரமும் டோலா யந்திரத்தில் எரிக்க சுத்தியாகும்.

17. வெங்காரம்: சங்கு, பலகாரை, அன்ன பேதி, காவிக்கல், பூநாகம் ஆகிய இவற்றை எலுமிச்சம் பழச் சாற்றில் அரைத்து ஒருநாள் சூரிய புடமிட சுத்தியாகும்.

18. சாதிலிங்கம்: இவற்றை எலுமிச்சம் பழச் சாற்றிலும் குழந்தைப் பாலிலும் தனித் தனியாக ஆறு மணி நேரமும் ஊறவைத்தால் சாதிலிங்கம் சுத்தியாகும்.

19. கந்தகம்: இவற்றை நெய்யில் சேர்த்து சட்டியில் உருக்கி பசும் பாலில் தோய்த்து எடுக்க வேண்டும். இவ்வாறு ஏழு தடவைகள் உருக்கியும் தோய்த்தும் எடுக்க கந்தகம் சுத்தியாகும்.

20. சூதம் (பாதரசம்): இவற்றை கல்வத்தில் போட்டு அரைத்து மஞ்சள் கலந்து மத்தித்து, பின் ஒட்டடைத்தூள் சேர்க்க வேண்டும். இவற்றை வெற்றிலேச் சாறுவிட்டு நன்ருக அரைக்கவேண்டும். அதற்குப் பிறகு தாழை நீர், மலாக்காய் நீர், செம்பரத்தம் பூவின் சாறு ஆகியவற்றில் தனித் தனியாக அரைக்க சுத்தியாகும்.

21. காவிக்கல்: பசும்பாலில் அரைத்து உலர்த்திஞல் சுத்தியாகும்.

22. வெள்ளேப் பாஷாணம்: இவற்றைச் சிறு சிறு பொடிகளாக்கிக் கொண்டு கிழி கட்ட வேண்டும். பின் சுண்ணும்பு நீர், சாணிப்பால், ஆவின்பால் இவை ஒவ்வொன்றிலும் தோலா யந்திரத்தில் எரிக்க சுத்தியாகும். எலிப் பாஷாணத்தையும் இவ்வாறு சுத்தி செய்ய வேண்டும்.

23. கற்பூர சிலாசித்து: தாமரைக்கிழங்கின் ரசம் அல்லது அல்லிக் கிழங்கின் ரசம் ஆகிய ஏதாவது ஒரு ரசத்தில் (சாறு) கற்பூர சிலாசித்துவைக் கல்வத்தில் போட்டு அரைத்து இரண்டு மணி நேரம் கழித்த பின் உலரவைத்தால் சுத்தியாகும்.

கற்பூர சிலாசித்து—இதனை பசும்பால் திரிபலாதி கஷாயம், கரசனுங்கனிசாறு ஆகியவற்றில் ஒரு நாள் (24 மணி நேரம்) அரைத்து வெயிலில் உலர்த்தினால் சுத்தியாகும்.

(திரிபலாதி கஷாயம் என்றால் கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் ஆகிய மூன்றும் சேர்த்து செய்துள்ள கஷாயமாகும்.)

24. நேர்வாளம்: இவற்றை ஈனாத எருமைக் கடா சாணியில் பிசைந்து தண்ணீர் விட்டு வேக வைத்து ஆறியதும் நேர்வாளத்தின் மேல் ஓடு போக்கி, அவற்றின் முளையை நீக்கி விட்டு, பருப்புக்களை வெயிலில் காயவைத்தால் நேர்வாளம் சுத்தியாகும்.

நேர்வாளத்தின் மேல் தோலையும், அதனுடைய முளையையும் நீக்கிவிட்டு, கற்றாழைச்சாறு, பசுவின் பால், பானகம், பசுவின் நெய் இவற்றில் தனித் தனியே வேகவைத்து எடுத்து உலர்த்த சுத்தியாகும். இது உயர்தரமான சுத்திமுறையாகும்.

25. அயம்: அயப்பொடியை (இரும்பு) கருவேலம் பட்டைச் சாற்றில் ஒரு நாள் கொதிக்க விட்டு (24 மணி நேரம்) பின்னர் அயப்பொடியை காடியில் கழுவி எடுக்க சுத்தியாகும்.

அல்லது அயப்பொடியை இரும்புக் கிண்ணத்தில் போட்டு அதில் நல்லெண்ணெய் ஊற்றி இதனை அடுப்பில் வைத்து மூன்று மணிநேரம் எரித்து அதன் பின் அயப்பொடியை எலுமிச்சம் பழச்சாறு விட்டு கழுவி எடுக்க சுத்தியாகும்.

26. கௌரி பாஷாணம்: இவற்றை எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து கிழி கட்டிவிட்டு சுண்ணும்பு நீரில் தோலா யந்திரத்தில் 6 மணி நேரம் எரித்தால் சுத்தியாகும்.

27. அன்னபேதி: இவற்றை கரசணுங்கனி பச்சிலைச் சாற்றில் வேக வைத்தால் சுத்தியாகும். தவிர எலுமிச்சம் பழச்சாற்றில் நீர் வற்றும் வரை ஊறவைத்தாலும் சுத்தியாகும்.

28. கம்பில்லம்: இதைச் சூரணித்து கிழி கட்டி கடுக்காய் சாற்றில் அல்லது காடி நீரில் தோலா யந்திரத்தில் வேக வைத்தால் சுத்தியாகும்.

29. மஸ்தகாய்: எலுமிச்சம் பழச்சாற்றில் மஸ்தகாயை அரைத்து மூன்று மணி நேரத்திற்குப் பின் எடுத்து வெயிலில் உலர்த்திஞல் சுத்தியாகும்.

30. எட்டிக் கொட்டை: இதனை சிறு சிறு துண்டுகளாக்கி சிறுகீரை வேரின் சாற்றில் ஒரு மணி நேரம் வேக வைத்தால் சுத்தியாகும்.

31. மிருதார்சிங்கி: சுக்கு சாற்றில் ஊற வைத்து பின் வெயிலில் உலர்த்த வேண்டும். இவ்வாறு மூன்று தடவைகள் ஊறவைத்து உலர்த்தி எடுக்க சுத்தியாகும்.

32. இந்துப்பு: ஆட்டு மூத்திரத்தில் அவித்து எடுத்தால் சுத்தியாகும். காடி நீரில் ஒரு மணி நேரம் அரைத்து வெயிலில் உலர்த்தினுலும் சுத்தியாகும்.

33. நவச்சாரம்: கழுநீரால் ஒரு மணி நேரம் அரைத்து வெயிலில் உலர்த்தி எடுக்க சுத்தியாகும்.

34. உப்பு: ஓட்டில் வறுத்து எடுக்க சுத்தியாகும்.

35. ஆனைதிப்பிலி: காடிநீரில் அல்லது ஆட்டு மூத்திரத்தில் மூன்று மணி நேரம் ஊற வைத்து வெயிலில் உலர்த்தி எடுக்க சுத்தியாகும்.

36. பெருங்காயம்: தாமரை இலைச் சாற்றில் மூன்று மணி நேரம் வெயிலில் ஊறவைத்து பின்னர் வெயிலில் உலர்த்தினுல் சுத்தியாகும்.

37. ஆமணக்கு விதை: இவற்றின் மேல் தோலையும், முளையையும் நீக்கி அதன்பின் இளநீரில் மூன்றி மணி நேரம் வேகவைத்து உலர்த்தி எடுக்க சுத்தியாகும்.

38. சீரகம்: புளித்த காடியில் நனைத்து வெயிலில் ஆறு மணி நேரம் உலர்த்த சுத்தியாகும்.

39. சுக்கு: இவற்றின் மேல் தோல் சீவி அதன் மீது வெள்ளைச் சுண்ணும்பு தட வி வெயிலில் மூன்று மணி நேரம் உலர்த்தி எடுக்க சு__தியாகும்.

40. மிளகு: புளித்த மோரில் ஒரு மணி நேரம் ஊறவைத்து ஓட்டில் போட்டு வறுத்து எடுக்க சுத்தியாகும்.

41. திப்பிலி: சித்திரமூலச் சாற்றில் ஒரு மணி நேரம் ஊறவைத்து உலர்த்தி எடுக்க சுத்தியாகும்.

## சுத்திமுறையின் அனுபவ உண்மை

விஷம் உள்ள மருந்துப் பொருள்களைச் சுத்தி செய்வதால் வேறு கெடுதல்கள் நோயாளிகளுக்கு வருவதில்லை. சுத்தி செய்யாத ''பச்சை வேட்டு'' மருந்துகளால் நோயாளிகள் புதுவகையான வியாதி களுக்கு உள்ளாகி அவதிப்பட நேரிடுகிறது.

மருந்துகள் முறையாக சுத்தி செய்யப்பட்டால் பச்சை மருந்தில் உள்ள கேடுகள் நீக்கப்படுவதுடன் புதிதான வீரியமும் ஏற்படுகிறது.

எந்த நோய்களுக்கு மருந்துகள் சேர்க்கப்படு கின்றனவோ அதற்கேற்ற முறையில் சுத்திமுறை மேற்கொள்ளுவது அவசியம்.

உதாரணமாக உப்பில்லாத உணவு மேற் கொள்ள வேண்டிய நோயாளிக்குக் கொடுக்கப்படும் மருந்தில் உப்பு சேர்க்க வேண்டியதிருந்தால் அந்நிலையில் சுத்தி செய்யப்பட்ட உப்பு சேர்க்கப்பட வேண்டும்.

சுக்கு, மிளகு, திப்பிலி போன்ற சரக்குகள் கஷாயத்திற்குப்பயன்படும் பொழுது சுத்தி செய்யத் தேவை இல்லை. அதே போன்று வேறு கடுமையான நோய் இல்லாதவர்கள் சாதாரணமாக இவற்றைச் சூரணித்துச் சாப்பிட்டாலும் சுத்தி செய்யத் தேவை இல்லை. ஆனால் கடுமையான நோய்வாய்ப்பட்டவர்

களுக்குச் சூரணமாக இவற்றைக் கொடுப்பதாக இருந்தால் அந்நிலையில் சுத்தி செய்து உபயோகப் படுத்த வேண்டும்.

எந்நிலையிலும் சுத்தி செய்த மருந்துகளைப் பயன் படுத்துவதால் மருந்தின் குணம், தன்மை, வீரியம்— இவற்றில் நல்ல அபிவிருத்தி ஏற்பட்டு விடுகிறது.

ஆகவே சித்தவைத்திய முறையில் சுத்தி செய்த மருந்துகளே சாலச்சிறந்தது. இதனையே எப்பொழு தும் பின்பற்ற வேண்டும்.

# மங்கள யோகீஸ்வர மீளுவின் சேய் நோய் பற்றிய உரையாடல்

"ஒவ்வொரு தாயும் தனது சேய்கள் நோய் நொடி இல்லாமல் வளர வேண்டும், வாழவேண்டும் என்று விரும்புகிருள். ஆனுல் அவள் விரும்புகிறபடி குழந்தையை வளர்க்க முடிவதில்லே.

ஏன்? பெற்ருேரின் உடல் சூட்டினுல் பிறந்த குழந்தைக்கு நோய் வந்து விடுகிறது. அவ்வாறு குழந்தை பிறந்த உடனே பெற்ருேரின் உடல் சூட்டினுல் ஏற்படும் நோய்க்கு கிரந்தி நோய் என்று கூறப்படுகிறது. கிரந்தி நோய்களில் பன்னிரண்டு விதங்கள் உண்டு.

தாயின் கர்ப்பத்தில் வளர்ந்து வரும்பொழுது தாயின் கர்ப்பச் சூட்டிலிருந்து சேயை நோய் பீடித்து விடுகிறது. அவ்வாறு கர்ப்பச் சூட்டினுல் குழந்தையைப் பாதிக்கும் நோய்க்கு—''கண நோய்'' என்று கூறப்படுகிறது. கண நோய்களில் இருபத்தி மூன்று வகைகள் உண்டு. தாயின் கர்ப்பத்தில் பீடிக்கும் 'கண நோய்' குழந்தையை பன்னிரண்டு வயது முடியும் வரை வேதனே கொடுத்து வருகிறது.

குழந்தைகள் பிறக்க வேண்டும் என்று ஆசைப் படும் தாய் தந்தைகள் உடல் ஆரோக்கியத்துடன்

இருக்க வேண்டும் என்பதை உணர்ந்து நடந்து வர வேண்டியது அவசியமாகும். இல்லையேல் உடலைப் பேணாத பெற்றோர்களின் தவறினால் பிறக்கும் குழந்தைகள் நோய்வாய்ப்பட்டு வேதனைகளை அனுபவிக்க நேரிடுகிறது.

குறிப்பாக ஆசையோடு குழந்தையை தாயார் பெற்றெடுத்து விடுகிறாள். தாய்ப்பால் கொடுத்து பாசத்துடன் குழந்தையை வளர்க்கவும் விரும்புகிறாள். அவ்வாறு வளர்க்க விரும்பும் தாயானவள் மிக உஷாராக கவனித்து வர வேண்டும்.

குழந்தைகள் உட்கொள்ளும் பால் அல்லது உணவுகளிலிருந்து மாந்த நோய்கள் ஏற்படுகின்றன, அவ்வாறு ஏற்படும் மாந்த நோய்கள் இருபது வகைகள் உண்டு.

இவை தவிர உணவுகளிலிருந்து பதினெட்டு விதமான கரப்பான் நோய்கள் ஏற்பட்டு குழந்தைகளை வாட்டி வதைக்கின்றன. மேலும் பிரளி, செவ்வாப்பு, சுரம், தொண்டைக்கட்டு இன்னும் எத்தனை-எத்தனை வகையான நோய்களோ பச்சிளம் குழந்தைகளைப் பாதித்து அவதிப்படுத்துகின்றன.

குழந்தைகள் சுவாசிக்கும் காற்று, உட்கொள்ளும் உணவு, குழந்தைகளின் சுற்றுப்புறத் துணிமணி இதரப் பொருள்கள், வெப்ப-தட்ப புறநிலைகள் பச்சிளம் சிசுக்களைப் பாதித்துவிடுகின்றன. நோய்வாய்ப்பட்ட குழந்தை துடித்துக் கதறுவதைத் தவிர வாய்திறந்து வேதனையைக் கூற முடியாது. குழந்தை வைத்திய அனுபவம் உள்ள

மருத்துவரைத் தேடி அலேய வேண்டியதேற்படு கிறது. அவ்வாறு மருத்துவரிடம் குழந்தையைக் காட்டி நோயினின்றும் குழந்தையைப் பாதுகாக்க வேண்டும்.

ஆகவே குழந்தைகளைப் பெற்றெடுக்கும் தாய் தந்தையர் குழந்தை நோய்கள் பற்றிய அடிப்படை அறிவும் பெற்றிருக்க வேண்டியது மிக அவசியம். பெற்ரோரின் பொது அறிவுக்கான எனது அனு பவங்கள் சிலவற்றைத் தருகிறேன்.

## குழந்தை நோய்களின் குணம்

**1. செங்கிரந்தி:** குழந்தை பிறந்ததும் தொண்டை கட்டி கீச்சுக்குரலில் கதறி அழும். கால், கை சிவக்கும். நீர், மலம் இறங்காது. வயிறு பொருமும்.

**2. கருங்கிரந்தி:** குழந்தை பாலுண்ணுமல் அலறி–அலறி அழும். கண்திறக்காது. கீழுதடு, கை, கால் கருப்பேறும். வயிறு ஊதி வலி பொறுக் காமல் கதறும்.

## மாந்தம் வகைகள்

**3. பொதுவான மாந்தம்:** குழந்தையின் உடல் வெம்பி வியர்க்கும். பால் உண்ணுது. வாந்தியும் சொக்கலும் ஏற்படும். சீதம் மலமாகவும், மலம் பால் போலும், தண்ணீர்ப் போலும் கழியும். கை, கால் குளிரும். கண் குழிவிழும்.

**4. வாத மாந்தம்:** குழந்தை வயிறு பொருமி கதறித் துடிக்கும். கொட்டாவி விடும். நாசி புண்ணுகும்.

**5. பித்த மாந்தம்:** வாந்தியும், கழிச்சலும் காணும். உடல் வியர்த்து குளிரும்' உடல் மஞ்சள் நிறமாகும்.

**6. சிலேத்ம மாந்தம்:** குழந்தையின் உடல் குளிரும். நெஞ்சில் கபம் வரும். நா வெளுத்துக் காணும். வயிறு பொருமி கழியும். சொக்கிவிழும்.

**7. ஊது மாந்தம்:** குழந்தையின் வயிறு ஊதி குறையும். கழிச்சல், கடுப்பு, வாந்தி எடுக்கும். சுரம் அடிக்கும், தொண்டையில் வலி இருக்கும்.

**8. நீர் மாந்தம்:** குழந்தையின் உடல் குளிரும். வாய் நீர் சுழற்றி வாந்தி செய்யும். பொருமிக் கழியும். மலம், சிறுநீர் கடுத்திறங்கும்.

**9. விஷ மாந்தம்:** குழந்தை மலச் சிக்கல் ஏற்பட்டு வயிறு வலித்து, இரைந்து கழியும். அரையின் கீழ் குளிர்ந்திடும். அடிக்கடி வாந்தி பண்ணும். உடல் வியர்க்கும்.

**10. போர் மாந்தம்:** குழந்தை பாலுண்ணது. வாந்தியும், மயக்கமும் ஏற்படும். தலையசைக்கும். மார்பு துடிக்கும். நெற்றி நரம்பு புடைக்கும். நா வறட்சி எடுக்கும். பூத்-பூத்தென்று கழியும்.

**11. பால் மாந்தம்:** குழந்தை வயிறு ஊதி நொந்து அழும். புளித்த நாற்றமாய் வயிறு கழியும். தொண்டையில் கோழை கட்டும். வாந்தி பண்ணும். கை, கால் வெதும்பி குளிரும்.

**12. செரியா மாந்தம்:** சுரம் காணும். தலை நோவும். வயிறு நொந்து கதறி அழும். மாவு

கரைத்ததுபோல் குழந்தை கழியும். சோர்ந்து கிடக்கும்.

**13. கட்டு மாந்தம்:** குழந்தை மலம் கட்டி வயிறு கழியும். சோர்ந்து தூங்கிவிழும். சிறு இருமல், சுரம், கொட்டாவி, தலைவலி ஏற்படும். வயிறு வலித்து அழும்.

**14. தலை மாந்தம்:** குழந்தை வயிறு பொருமி கதறும். ஏப்பம், கொட்டாவி விடும். கை கால் குளிரும். நாசியில் நீர்வடியும். குளிர் சுரம் காணும். முகம் வியர்க்கும்.

**15. துலை மாந்தம்:** குழந்தை உடல் முறுக்கி துலைத்து அழும். அதிக வாந்தி, கொட்டாவி ஏற்படும். உடல் வியர்க்கும். முகம் கடுகடுப்பாகும். வலிப்பு கண்டு கை, கால் விரைக்கும்.

**16. சுழி மாந்தம்:** குழந்தையின் சுவாசம் சுழிக்கும். சுரம் காயும். வாந்தி, விக்கல் ஏற்படும்.

**17. முக்கு மாந்தம்:** குழந்தை முக்கி சீதமும் மலமுமாய் கழியும். சுரம் காயும். புறங்கால்வீங்கும்.

**18. வீக்க மாந்தம்:** சுரம் காயும். காதும் கண்ணும் வீங்கும். நாவு புண்ணுகும்.

**19. வாள் மாந்தம்:** உடல் வெளுத்து மாறும். கடுப்பு, வலிப்பு போன்ற வாதனைகள் ஏற்படும்.

**20. உளை மாந்தம்:** மல சலம் கட்டி அலறி அழும். மிரண்டு பார்க்கும்.

**21. அட்சர மாந்தம்:** குழந்தை அஸ்தியில் சூடேறி குளிர்ஜுரம், பேதி காணும். உதடும், வாயும் வெடித்துப் புண்ணுகும். உடல் மெலியும்.

## கரப்பான் நோய் வகைகள்

**22. வாத கரப்பான்:** குழந்தையின் உடல் கனத்து, வெளுத்து தடிப்புகள் ஏற்படும். விஷவாத கரப்பானுக்கு உடல் ஊறும். கை, கால், அடி வயிறு வெடிக்கும்.

**23. பித்த கரப்பான்:** குழந்தையின் உடலில் அரிப்பும், காய்ச்சல், தலைவலி, வாந்தியும் வரும்.

**24. செங்கரப்பான்:** குழந்தையின் உடல் சிவந்து, வெடித்து நீர் கசியும். நீர் கட்டும். தலை வலி மிகும்.

**25. கருங்கரப்பான்:** குழந்தையின் உடல் வெம்பி பச்சை நரம்பு தோன்றும். உடல் அரிக்கும். முறுக்கி அழும். முகம், கால் ஊதும். பாலுண்ணுது.

**26. சூலை கரப்பான்:** குழந்தையின் உடல் வெடித்துப் புண்ணுகும். முழங்கால், முழங்கை வீங்கும்.

**27. ஊது கரப்பான்:** குழந்தையின் உடல் நாளுக்கு நாள் ஊதி புண்ணுகும். குளிர் காய்ச்சலும், கழலைக் கட்டியும் வேதனை தரும்.

**28. அரிகரப்பான்:** குழந்தையின் நீர் இறங்கும் ஸ்தானங்களில் புண் ஏற்பட்டு ஆருமல் அரித்து வரும்.

**29. பால கரப்பான்:** குழந்தையின் கண்டத்தில் வெடித்து புண்ணுகும். அதிலிருந்து துர்நாற்றம் ஏற்பட்டு நீராய்க் கசியும். உடல் முழுதும் அரித்து

சொரிவரும். புண்ணுகி நீரும் சலமுமாய் வடியும். உருவம் குலேயும்.

**30. வரட்சி கரப்பான்:** குழந்தை உடல் முழுதும் சிறு சிரங்கும், அரிப்பும், சொரியும் காணும். தூங்காமல் வீறிட்டழும்.

## காமாலே நோய்கள்

**31. பித்தசோகை அல்லது காமாலே:** பித்த நீர் அதிகரித்து குழந்தையின் உடல் ஊதும். கண் வெளுக்கும்.

**32. ஊது காமாலே:** குழந்தையின் முகம், கால் அதைக்கும். சுரம், காதடைப்பு, இளேப்பு வரும். நாவு புண்ணுகும்.

## கண நோய்கள்

**33. வாத கணம்:** குழந்தையின் உடல் கணக்கும். புகைச்சல், மூச்சு இரைச்சல் காணும். சுரம், நாவறட்சி ஏற்படும். நீர் சுருக்கி இறங்கும். மலம் கழியும்.

**34. பித்த கணம்:** குழந்தை மஞ்சளாய்க் கழியும். நாக்கு கடைவாய் புண்ணுகும். உடல் எரியும். தலே கிறுகிறுக்கும்.

**35. சிலேத்ம கணம்:** குழந்தையின் கீழ்-மேல் உதடுகள் வாய் வெடித்து புண்ணுகும். உடலில் அரிப்பும், சொரியும், கை கால் வீக்கமும் காணும்.

**36. மாந்த கணம்:** குழந்தையின் உடல் இளேக்கும். வயிறு இரைச்சலுடன் பச்சையாய்க்

கழியும். பொருமல், வாய்நீர் வடிச்சல் காணும். கண் சுழலும். நாவறட்சி, வாந்தி ஏற்படும்.

**37. ஊதுமாந்த கணம்:** குழந்தையின் கண், கால், உடல் வீங்கும். நாவு புண்ணுகும். சுரம் காயும். சுவாசம் மிகும்.

**38. நீர்மாந்த கணம்:** குழந்தையின் நாசியில் நீர் வடியும். இருமல், சுரம் காணும். வயிறு பொருமி இரைச்சலுடன் கழியும். மயக்கம், தலே புரட்டல் ஏற்படும்.

**39. நீர்க் கணம்:** குழந்தைக்கு சுரம் விட்டு விட்டு வரும். வியர்க்கும். நாக்கு, வாய் வெடித்துப் புண்ணுகும். தண்ணீர் போல் கழியும். கை, கால் குளிரும். புறங்கை, கால், முகம் மினுமினுக்கும்.

**40. சிங்கிமாந்த கணம்:** உந்தியில் சூடேறி, ஈரல் வெந்து புண்ணுகி உடல் அனல்போல் காயும். மேல் நோக்கி சுவாசம் இளேக்கும். குழந்தை திக்கு முக்காடும்.

**41. சுழி கணம்:** குழந்தையின் உச்சி குழி விழும். இளேப்புடன் சுவாசம் விடும், மார்பு புடைத் துக் காணும். இருமல் வரும். வயிறு, ஈரல், நெஞ்சு, தொண்டை, நாவு வெந்து புண்ணுகும். பாலுண்ணுமல் அலறி அழும். வயிறு பொருமும். கண் சொருகும். வாயில் நுரை தள்ளும். வாந்தியும், கழிச்சலும் வரும். முகம் மஞ்சள் போலாகும்.

**42. சூலிக் கணம்:** குழந்தையின் நெஞ்சு, வாய், தொண்டை, நாவு வெந்து புண்ணுகும். இருமல் வரும், வயிறு பொருமும். பாலுண்ணுது.

**43. பிரலிக் கணம்:** குழந்தை வயிறு பொருமி மாப்போல் கழியும். மலம் கட்டி வயிறு பொருமி துடித்து அழும். மூக்கில் நீர் வடியும். உடல் வலிக்கும்.

**44. மகா கணம்:** குழந்தையின் முகம், புறங்கால், புறங்கை, மினுமினுக்கும். உடல் வெம்பும். நாவு உதடு புண்ணுகும்.

**45. வரட்சி கணம்:** குழந்தைக்குப் புகைச் சலும், இருமலும் வரும். நெஞ்சு துடிக்கும். நாக்கில் வெடிப்பு வரும். இருமி சளி விழும். மிகுந்த தூக்கமும், மயக்கமும் வரும்.

**46. பிறக் கணம்:** குழந்தையின் வயிறு பொருமி, பச்சையாய்க் கழியும். பாலுண்ண வாந்திவரும். சுரத்தால் கண் சொருகும். தலை புரட்டி மயங்கிவிழும்.

**47. ஆம கணம்:** ஒவ்வொரு மூன்று மணிக்கும் குழந்தையின் உடல் சுடும். முக்கி அழும். வயிறு பொருமி கழியும். கால் குளிரும்.

**48. நீராம கணம்:** குழந்தை மஞ்சளாய்க் கழியும். கண்களில் நீரும், பீளையும் வடியும்.

**49. முக்கு கணம்:** குழந்தை அடிக்கடி வாந்தி செய்யும். சீதமும், இரத்தமுமாய்க் கழியும். நாவு வேகும். அடி தள்ளும். சுரம், தலைவலி, நாவறட்சி ஏற்படும்.

**50. மூல கணம்:** குழந்தை சீதமும், இரத்தமு மாய்க் கழியும். காய்ச்சல், வயிற்றிரைச்சல், தலை வலி காணும்.

## சுரம் வகைகள்

**51.** **அஸ்தி சுரம்:** அனல் போல் காய்ந்து குழந்தை திணறி அழும். சுவாசம் விட்டுவிட்டு வரும். மலம் கடுத்து இறங்கும். வாந்தி வரும்.

**52.** **உடல் சுரம்:** குழந்தை காய்ச்சலால் உடல் வலித்து கதறும். உதட்டைக் கடிக்கும். திரு திருவென்று கண் சிமிட்டாமல் விழிக்கும். பால் உண்ணுது. பதறி அழும்.

**53.** **மாங்கிஷ சுரம்;** கடும் சுரம் காயும். மூச்சுத் திணறி உடல் நடுங்கும். உடல் வெளுக்கும். உரோமம் சிலிர்க்கும்.

**54.** **இரத்த சுரம்:** குழந்தைக்கு சுரம் விட்டு விட்டு வரும். கை கால் குளிரும். வயிறு வலித்து அழும். தலை சுற்றலும், நாவு வரட்சியும் காணும்.

**55.** **கண சுரம்:** வயிறு புண்ணுகி சுரம் காயும். குழந்தை மயங்கி விழும்.

**56.** **ஆம சுரம்:** ஒவ்வொரு மூன்று மணிக்கும் சுரம் வரும். பாலுண்ணுது. கை கால் குளிரும். நாவரட்சி காணும்.

## ஜன்னி வகைகள்

**57.** **மாந்த ஜன்னி:** மாந்தம் மிகுதியாகி அதனுல் குழந்தைக்கு ஜன்னி காணும். கடும் சுரம், மயக்கம் காணும். கண் குழி விழும். நாவு சொர சொரப்பாக இருக்கும். உணர்வு கலங்கும். கண் உருளும்.

**58. ஆம ஜன்னி:** குழந்தை கண் திறவாமல் மயங்கிக் கிடக்கும். தொண்டை கட்டி முக்கி அழும். மலம் இறங்காது. சுரமும், தாபமும் அதிகமாகும். வயிறு ஊதும். நெற்றி சுளிக்கும்.

**59. கோரம ஜன்னி:** குழந்தைக்கு வாயு மிகுதி ஏற்பட்டு உடல் கனல் போல் காயும். சதை துடிக்கும். கை, கால், கண்கள் பதைக்கும். புறங் கால்கள் வீங்கும்.

## தோஷம்

தோஷம் என்பது சுற்றுப்புற அசுத்தங்கள், ஆரோக்கியம் இல்லாத சுற்றுப் பொருள்கள், துணிமணி போன்ற பண்ட-பாத்திரங்கள் ஆகியவற்றிலிருந்தும், குழந்தையின் உடல் ஏற்றுக் கொள்ளாத உணவுப் பொருள்களிலிருந்தும் ஏற்படுவதே 'தோஷம்' என்றழைக்கப்படுகிறது.

**60. பக்ஷி தோஷம்:** குழந்தை தண்ணீர் போல் கழியும். பாலுண்ணாது. வாந்தி செய்யும். தலை கவிழும். கண் குழி விழும். உடல் பதறி அழும். கண்களில் பீளை சாடும்.

**61. பறவை தோஷம்:** குழந்தை தலைக் கனம் ஏற்பட்டு உடல் வலித்து அலறி அழும். வலிப்பு வரும். மூச்சு சுழி வாங்கும். வயிறு கழியும்.

**62. எட்சி தோஷம்:** குழந்தையின் இரத்தம் சூடேறி உடல் வெம்பும். கண்களில் பீளை கட்டும். பாலுண்ணாது. பதறி அழும். கண்ணைப் பிசைந்து மயங்கி விழும்.

**63. முட்டு தோஷம்:** மாதவிடாயான பெண்கள் மடியில் குழந்தையைப் படுக்கவைத்தால் அதனால்

குழந்தைக்கு பாதிப்பு ஏற்படும். குழந்தை வாந்தி பண்ணும். உச்சியும், கண்ணும் குழிவிழும். நாக்கு, வாய் கருப்பாகும்.

**64. தேரை தோஷம்:** குழந்தையின் உடல் உலர்ந்து வரும். நாளுக்கு நாள் வெளுக்கும். கை, கால் சுருங்கி முடங்கும். வயிறு பொருமும். குழந்தை தேராது.

## கழிச்சல்

**65. மாந்த கழிச்சல்:** குழந்தை வாந்தியால் மூர்ச்சையாகும். கை, கால் குளிரும். பல விதமாக கழியும். குரல் கம்மி அழும்.

**66. கண கழிச்சல்:** குழந்தை சீதமாயும், பால் போலும் கழியும். கை, கால் குளிரும். காதடைக்கும்.

**67. ஆம கழிச்சல்:** குழந்தை பாலுண்ண எதிர் எடுக்கும். இரத்தமாய் கழியும். சுரம் காயும். கை, கால் குளிரும்.

## வேறு சில நோய்கள்

**68. செவி நோய்:** குழந்தை கண்ணில் பீளை சாடும். கையினுல் தலையைத் தேய்க்கும். குரல் கம்மி புரண்டு அழும்.

**69. கெந்தக தாளி:** வாயும், தொண்டையும் புண்ணுகி நாற்றம் வரும். உடல் வெம்பும். மலம் தீயும். நீர் சுடும்.

**70. புழு நோய்:** குழந்தைக்குச் சீதமாயும், தண்ணீர் போலும் மலம் கழியும். கருநிறமாயும், பசும் சாறுபோலும் மலம் கழியும்.

# கைவைத்தியம்-செய்வைத்தியம்

# இருவகை வைத்தியம்

பசி தீர்ப்பது சமையல். நோய் தீர்ப்பது வைத்தியம். பசி தீர உணவு வேண்டும். நோய் தீர மருந்து வேண்டும். உணவு அளிப்பது உழவன். மருந்து அளிப்பது வைத்தியன். உணவும், மருந்தும் தருவது குடும்பம். குடும்பம் இருப்பது வீடு. குடும்ப வைத்தியம் இரு வகைப்படும். இதுவே சித்தர்கள் வளர்த்த வைத்திய முறை.

வைத்தியம் என்பது சம்பாதனைக்குரிய தொழில் அல்ல. பிணிகள் போக்கி மக்களைக் காத்திடும் சேவை. மனித சேவை ஒவ்வொருவரின் தேவை யாகும். இந்த தேவையை நிறைவேற்றுவதே கை வைத்தியம், செய்வைத்தியம் என்று இருவகைப் படுகிறது.

நோய்வாய்ப்பட்டதும் குடும்பத்தினரே நோய் தீர்க்கக் கையாளும் வைத்திய முறை ''கை வைத்தியம்'' என்பதாகும். குடும்பத்தினர் கொடுக்கும் மருந்து ''கைமருந்து'' என்றழைக்கப் படுகிறது. தங்களால் முடியாதபோது அனுபவப்

பயிற்சியும், அறிவுத்தேர்ச்சியும் உள்ள வெளி மருத்துவரை நாடவேண்டியதிருக்கிறது.

நோயின் குணம் தெரிந்து மருந்துகள் செய்து கொடுத்து மருத்துவர்கள் நோயைத் தீர்ப்பதால் ''செய்வைத்தியம்'' என்று வகைப்படுத்தப்படு கிறது. மருத்துவர்கள் தரும் மருந்து ''செய் மருந்து'' என்றழைக்கப்படுகிறது.

கைவைத்தியமானாலும், செய்வைத்திய மானாலும் குடும்பத்தினரே செய்து வரலாம். சித்தர்களின் போதனை இத்தகைய சேவை நோக்கத் துடன் கொண்டதேயாகும்.

ஆறு தலைமுறைகளுக்கு மேலான அனுபவங் களில் கிடைத்த ''கைவைத்தியம்''-''செய் வைத்தியம்'' என்ற இருவகையான அனுபவ மருந்துகளைத் தொகுத்துக் கீழே தருகிறேன்.

## அனுபவ மருந்துகள்

1. இருமல், பீனிசம், சளி ஆகியவற்றால் உபத்திரவம் இருந்தால் சித்தரத்தையைப் பொடித்து வெண்ணெயில் மத்தித்துச் சாப்பிட வேண்டும் அல்லது பசும்பாலுடன் கலந்து சாப்பிட வேண்டும். மூன்று நாட்களில் குணமாகும்.

2. வாத சுரம் வேதனைப்படுத்தினால்— அரத்தை, சதகுப்பை, சுக்கு ஆகியவற்றைச் சமனெடை எடுத்து, நொச்சி இலைச் சாற்றால் அரைத்து கஷாயமாக்கி—காலை, மாலை மூன்று நாள்கள் ஆறு வேளைகள் சாப்பிட குணமாகும்.

3. பித்த சுரம் ஏற்பட்டால்—பரவட்டை, சித்தாமுட்டி, ஓமம், வேலிப்பருத்தி வேர், மிளகு ஆகியவற்றைத் தட்டிக் கஷாயமாக்கி காலே, மாலே மூன்று நாட்கள் அருந்த குணமாகும்.

4. சிலேத்ம சுரம் ஏற்பட்டால்—திப்பிலி, ஆடாதோடை, சுக்கு, சித்தரத்தை, ஓமம், கண்டங்கத்தரி ஆகிய இவற்றைப் பொடித்தும், நறுக்கியும் வைத்துக்கொள்ள வேண்டும்.

சட்டியில் தேன் ஊற்றி அடுப்பில் வைத்து தேன் பொங்கும் பொழுது தண்ணீர் ஊற்றி மேற்கூறிய மருந்துகளேப் போட்டு காய்ச்சி கஷாயமாக்கிக் கொண்டு காலே, மாலே குடித்து வர குணமாகும்.

5. சத்தி எரிவாதம் ஏற்பட்டு உடல் வேதனேப் படுத்தினுல்—பேரிலந்தைப் பழம், புளியாரை—இவ்விரண்டையும் அரைத்துக்கொண்டு—இவற்றைப் பழமையான காடி நீரில் கரைத்து மத்தால் கடைய நுரை கிளம்பும். நுரையை எடுத்து உடல் வேதனே தரும் பாகங்களில் பூசி வரவேண்டும். வேதனே குறைந்து குணமாகும்.

6. உதரவாயு உபத்திரவம் ஏற்பட்டால்—உப்பில் வெள்ளேப் பூண்டை நறுக்கிப் பொதிய வைத்து சட்டியில் இவற்றைப் போட்டு வேகவைக்க வேண்டும். நன்ருக வெந்த பின்னர் எடுத்து அரைத்து போதிய அளவு நீராகாரம் அல்லது தண்ணீரில் கலந்து குடித்து வரவேண்டும். உதர வாயு உபத்திரவம் நீங்கும். உடல் குணமாகும்.

7. அசீரணம், கிராணி ஏற்பட்டால்—ஓதிய மரத்தின் ஈர்க்கு, கருவேப்பிலை ஈர்க்கு, சுக்கு, சீரகம் ஆகியவற்றைத் தட்டிவைத்துக் கொண்டு, சட்டியில் தேன் விட்டுப் பொங்கிவரும் பொழுது அதில் தண்ணீர் ஊற்றி தண்ணீரில் தட்டி வைத்திருக்கும் மருந்து சரக்குகளைப் போட்டு க்ஷாயமாக்கிக் கொண்டு குடித்து வரவேண்டும். அசீரணம், கிராணி தீரும். உடல் நோய் அகலும்.

8. பித்தம் அதிகமானால்—நெல்லி, முள்ளி, குட்டிவிலா, சீரகம், சுக்கு, சித்தமுட்டி, நெல்பொரி இவற்றை அரைத்து தண்ணீர் விட்டுக் காய்ச்சி க்ஷாயமாக்கி உட்கொள்ள பித்தம் தீரும்.

9. குன்மவலி, கிருமி உபத்திரவம் ஏற்பட்டால்—பிரண்டை, வேம்பின் ஈர்க்கு, புரச வித்து—இவற்றை அரைத்துக் க்ஷாயமாக்கி உட்கொள்ள குணமாகும்.

10. விக்கல் விடாதிருந்தால்—பருத்தி விதை, திப்பிலி, ஏலம், நெல்பொரி—ஆகியவற்றைப் பொடித்துச் சர்க்கரையும் தேனும் கலந்து குழைத்து உண்ண விக்கல் போகும்.

11. பித்தம் தீர—சீரகம், நெல்லி, முள்ளி, சுக்கு, ஏலம் இவற்றைப் பொடித்து சரியாய் சர்க்கரையும் தேனும் கலந்து குழைத்து உண்ண பித்தம் போகும்.

12. குன்மவலி எட்டும் தீர—சோம்பு, சுத்தி செய்த மண்டூரம், நாயுருவிச் சாம்பல், மிளகுப் பொடி சமனெடை எடுத்து இத்துடன் எட்டில் ஒரு

பாகம் காயம் சேர்த்து அரைத்து ஒரு கழிஞ்சி அளவு தினம் ஒரு வேளை உண்ண குன்மவலி குணமாகும்.

*13*. அசிரணம், சகல தோஷங்களுக்கும்—மிளகை தேவையான அளவு அரைத்து வெந்நீரில் கலந்து கரைத்து குடித்துவர நாளடைவில் குணமாகும்.

*14*. ஈளை, இருமல் ஏற்பட்டால்—ஆடா தோடை, கண்டங்கத்திரி, துளசி ஆகியவற்றைப் பிட்டவியலாக அவித்து, ஆவிநீரில் திப்புலித்தூள் போட்டு சாப்பிட்டு வர குணமாகும்.

*15*. ஈளை, பஞ்சகாசம், விக்கல் உபத்திரவம் தீர—பெருங்காயம், வேலி இலைச்சாறு இவற்றை ஆமணக்கு நெய்யில் விட்டு காய்ச்சி சிறு கரண்டி அளவு தினம் ஒரு வேளை உட்கொள்ள உபத்திரவம் தீரும்.

## ஆமணக்கு நெய் செய்யும் முறை

சிற்றாமணக்குக் கொட்டை எடுத்து ஒரு இரவு முழுவதும் தண்ணீரில் ஊறவைத்து, மறுநாள் காலையில் நீரை வடித்து மறுபடியும் அதில் புதிய நீர் விட்டு அடுப்பேற்றி இரண்டு மணி நேரம் வேக வைத்து பின் நீரை வடித்துவிட்டு கொட்டைகளை ஒரு பாயில் விரித்துப் போட்டு மூன்று நாட்கள் வெயிலில் காய வைக்க வேண்டும்.

நன்றாக காய்ந்தபின்னர் அவற்றை எடுத்து உரலில் இடித்து அதற்குப் பத்து மடங்கு தண்ணீர் விட்டு அடுப்பில் ஏற்றி கொதிக்க விட வேண்டும்.

அவ்வாறு கொதிக்கும் பொழுது விடாமல் கலக்கிக் கொண்டிருக்க வேண்டும்.

சிற்றாமணக்கு நெய் உருவாகி நீருக்கு மேலே தேறியதும் அவற்றை மிக ஜாக்கிரதையாக வடித்து எடுக்கவேண்டும். அவை ஆறிய பின்னர் ஒரு சீஸாவில் அடைத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

சிற்றாமணக்கு நெய் உருவாகி நீருக்கு மேல் தேறி வருவதற்கு முன்னரே கொதி நிலையில் தண்ணீர் இருக்கும் பொழுது அத்துடன் இளநீர் சேர்த்தால் உருவாகும் ஆமணக்கு நெய் தூய வெண்மையாக இருக்கும்.

### ஆமணக்கு நெய் தயாரிக்கும் மற்றொரு முறை

சிற்றாமணக்குக் கொட்டை எடுத்து உரலில் இடித்து அவற்றை ஒரு துணியில் கிழி கட்டி (மூட்டையாகக் கட்டி) ஒரு பெரிய பானையில் போட்டு அவற்றில் எட்டு மடங்கு தண்ணீர் விட்டு தீ எரிக்க நெய் நீர்மேல் தேறி வரும்பொழுது ஜாக்கிரதையாக நெய்யை வடித்து எடுக்க வேண்டும். ஆறியதும் நெய்யை சீஸாவில் அடைத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

### சுகபேதி நெய்

16. சுருள்ளி, முருங்கப்பட்டை, மூர்க்கரைச் சாரணைவேர், இவற்றைச் சமனெடை எடுத்துக் கட்டிச் சாறு பிழிந்து கொள்ள வேண்டும், இதன் சம எடை கொட்டை ஆமணக்கு நெய் விட்டு எரித்து எடுத்து கொள்ள வேண்டும். சிறு கரண்டி அளவு

கொடுத்து வர மலக்கட்டு, கரப்பான், சிரங்கு தீரும். சிறு குழந்தைகளுக்குப் பயன்தரும் சுகபேதி நெய்.

### சுகபேதி ஜாம்

17. ரஸ்தாளி வாழைப் பழம் எடை 5 பலம் என்றால் திராக்ஷைப்பழம் 2½ பலம் எடை. ஓமம், சுக்கு, மிளகு, வகைக்கு ½ விராகனெடை. கடுகு ரோகணி பலம் 1½. சுத்திசெய்த நேர்வாளம் பலம் 2½. கடுகுநெய் பலம் ½. பசுவின் நெய் பலம் 1. தேன் பலம் 2½. இவை அனைத்தையும் கல்வத்தில் போட்டு 48 மணி நேரம் நன்றாக ஆட்டி எடுத்துக்கொள்ள வேண்டும். அகல வாயுள்ள கண்ணாடி சீஸாவில் காற்றுப் போகாது அடைத்துக் கொண்டு தேவைப்படும் பொழுது சிறு கரண்டி அளவு எடுத்து குழந்தைகள் விரும்பித் தின்னும் தோசை, இட்டலி, அப்பம் போன்ற தின் பண்டங்களில் தடவிக் கொடுத்தால் நல்ல பேதியாகும்.

அதிக பேதியானால் வசம்பைச் சுட்டு இள வெந்நீரில் உரைத்துக் கொடுக்கவும். நீர்க் கஞ்சி, மோர் அல்லது நீலி வேர்க் கியாழம் (கஷாயம்) கொடுத்தாலும் அதிக பேதியை நிறுத்திவிடும்.

சிறு குழந்தைகளுக்குப் பயன்தரும் சுகபேதி ஜாம்.

18. வெள்ளைக் காக்கணன்வேர், திப்பிலி வகைக்கு விராகனெடை ஒன்று என்றால் மிளகு விராகனெடை இரண்டு. இவற்றைத் தண்ணீர் விட்டரைத்துக் கொள்ள வேண்டும். இவற்றில் ஒரு

விராகனெடை மருந்தை குளிர்ந்த நீரில் கரைத்துக் கொடுக்க நல்ல பேதியாகும்.

### லிங்க மை

**19.** சாதிலிங்கம், வெங்காரம் வகைக்கு ஒரு பலம், ஆமணக்குப் பருப்பு நான்குபலம், சுத்திசெய்த நேர்வாளம் எட்டுபலம் ஆகிய இந்த நான்கையும் அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு தயாரித்துள்ள 'லிங்க மை'யில் ஒரு குன்றிமணி அளவு எடுத்து குளிர்ந்த நீரில் கலந்து கொடுக்க நல்ல பேதியாகும். அதிக பேதியானல் வெந்நீர் கொடுக்க நின்றுவிடும்.

### பூபதி மாத்திரை

**20.** இரசம், வெங்காரம், கெந்தகம், நேர் வாளம் இவற்றைச் சுத்திசெய்து கொள்ளவேண்டும். இரசம், சுக்கு, வெங்காரம், கெந்தகம் வகைக்கு ஒரு விராகனெடை என்றல் சுத்திசெய்த நேர்வாளம் நான்கு விராகனெடை என்ற அளவில் கல்வத்தி லிட்டு குளிர்ந்த நீர்விட்டு அரைத்துக்கொள்ள வேண்டும். பாசிப்பயறு அளவு மாத்திரைகளாக்கி நிழலில் காய வைக்க வேண்டும். காற்றுப்புகாத சீஸாவில் வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு மாத்திரையை தண்ணீரில் கலந்து கொடுக்க வேண்டும். நாளைக்கு ஒரு மாத்திரை வீதம் கொடுத்துவர—ஊது மாந்தம், பொருமல் வாதம் ஆகிய நோய்கள் குணமாகும். தாயார் பத்தியம் இருக்கத் தேவையில்லை.

### மாந்தம் போக்கும் கஷாயம்

21. ஒரு வசம்பை சட்டியில் போட்டு கரிக்கி அதன்பின்னர் கோஷ்டம் விராகனெடை இரண்டு, ஓமம் விராகனெடை இரண்டு என்ற அளவில் கரிக்கிய வசம்புடன் சட்டியில் போட்டு வறுக்க வேண்டும். ஓமம் பொரியும் பொழுது ஒரு படி தண்ணீர் விட்டு அரைக்கால் படியாக காய்ச்சி வற்றவைக்க வேண்டும். காலையிலும், மாலையிலும் இந்த கஷாயத்தைக் கொடுத்துவர வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி, மாந்தம் ஆகிய நோய்கள் தீரும். பத்தியம் இல்லை.

### கோரோசனைக் குளிகை

22. அதிமதுரம், கோஷ்டம், திப்பிலி, திரிசாதம், சந்தனம், சாத்திரபேதி, லவங்கம், லவங்கப் பத்திரி, பர்ப்பாடகம், வசுவாசி ஆகியவை வகைக்கு ஒரு விராகனெடை. இவற்றுடன் கோரோசனை நான்கு விராகனெடை கல்வத்தில் போட்டு இளநீர்விட்டு அரைக்க வேண்டும். ஒரு குன்றிமணி அளவு மாத்திரைகளாக உருட்டி நிழலில் காயவைத்து எடுத்துக்கொள்ள வேண்டும். நாளொன்றுக்கு ஒரு குளிகை என்றளவில் சர்க்கரை, அல்லது தேனில் கலந்து கொடுத்துவர—கணை, கழிச்சல், இருமல், தோஷம், தாகம், வரட்சி ஆகிய நோய்கள் குணமாகும்.

### தாகம் போக்க கியாழம்

23. புளியம்பட்டை, மிளகு, புங்கமர இலை, வேலிப்பரித்தி இலை, நாயுருவி இலை—இவைகளின்

இலைச் சாம்பல்—சமனெடை எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு விராகனெடை ஓமம் சட்டியில் போட்டு பொரித்து வரும் பொழுது மேற்கூறியவை அனைத்தையும் போட்டு தண்ணீர் விட்டுக் காய்ச்ச வேண்டும். கால் படி தண்ணீர் அளவு எடுத்து குடித்துவர தாக நோய் தீரும்.

24. ஏலம், அதிமதுரம், பற்பாடகம், சிந்தில், அறுகம் வேர், சந்தனம், வில்வப்பழம், விலாமிச்சு, வேம்பு ஈர்க்கு இவைகளைச் சம அளவாக நறுக்கி இரண்டு படி தண்ணீரில் போட்டு, கொதிக்க வைத்து கால் படியாக வற்றவைத்துக் குடித்துவர தாக நோய் தீரும்.

### கக்குவானுக்கு

25. மயிலிறகுச் சாம்பல், மிளகுச் சாம்பல் சமனாய்ப் பொடித்து ஆவின் நெய்யில் மத்தித்து களஞ்சிக்காயளவு தினம் ஒரு வேளை கொடுத்துவர கக்குவான் நோய் தீரும்.

26. தூதுளைச் சாறு, ஆவின் நோய் இவ் விரண்டையும் சமமாய்க் கலந்து கோஷ்டம் ஒரு விராகனெடை இதில் கட்டிப் போட்டு பதமாய்க் காய்ச்சி தினம் இரு கரண்டி வீதம் கொடுத்துவர கக்குவான் நோய் தீரும்.

### இளைப்பு, இருமலுக்கு

27. தேன், இஞ்சிச் சாறு, மாதுளம்பழ ரசம் இவைகளைச் சமமாகக் கலந்து தினம் சிறு கரண்டி அளவு கொடுத்துவர இளைப்பு, இருமல் தீரும்.

28. இண்டின் வேர், வேல்பருத்தி வேர், தூதுளை வேர் வகைக்கு ஒரு பலம், சுக்கு, திப்பிலி, வெந்தயம் விராகனெடை ½. இவை அனைத்தையும் தட்டி ஒரு படி நீரில் போட்டு காய்ச்சி கியாழம் செய்து தினம் ஒரு கிளாஸ் அளவு கொடுத்து வர இளைப்பு இருமல் தீரும்.

### வாந்தி தீர

29. கலைக்கொம்பு, திப்பிலி, அதிவிடயம் இவற்றைச் சமனாய்ப் பொடித்து கடிகைப் பிரமாணம் தேனில் கொடுத்துவர வாந்தி தீரும்.

### விக்கல் தீர

30. தேற்கு விரை, சந்தனம், கலைக்கொம்பு இம்மூன்றையும் குழந்தைப் பாலில் அரைத்து அவற்றில் கொட்டைப் பாக்களவு எடுத்து இளநீரில் கரைத்து இவற்றுடன் பொரித்த வெண்காரம், வெல்லம் வகைக்கு ½ விராகனெடை சேர்த்துக் கலக்கிக் கொடுக்க விக்கல் உடனே தீரும்.

31. திப்பிலி விராகனெடை எட்டு, சீரகம் விராகனெடை பத்து, இவற்றை வறுத்துப் பொடித்து அவற்றுடன் சுட்ட மயிலிறகுச் சாம்பல் சமனளவு கலந்து தேன் விட்டு மத்தித்து கழஞ்சிக் காயளவு கொடுக்க விக்கல் தீரும்.

32. திப்பிலி, கடுகுரோகனி சமனெடை எடுத்து வறுத்து மயிலிறகு சுட்ட சாம்பலுடன் சமனளவு கலந்து தேன் விட்டு மத்தித்து கழஞ்சிக் காயளவு கொடுக்க விக்கல் தீரும்.

33. மாதுளை, நெற்பொரி, சர்க்கரை, திப்பிலி ஆகியவற்றைப் பொடித்து கடிசலப் பிரமாணம் தேனில் குழைத்துக் கொடுக்க விக்கல் தீரும்.

## வயிற்று நோய், வாந்தி

34. வெற்றிலையில் நரம்பு எடுத்து சுண்ணும்பு பூசி மடித்து சட்டியில் போட்டு நன்ருய் வறுத்து ஒரு படி நீர்வார்த்து அரைக்கால் படியாகக் காய்ச்சி வடித்து சங்களவு கொடுத்துவர வயிற்று நோய், சீதக்கடுப்பு, வாந்தி, தாகம் ஆகிய நோய்கள் தீரும்.

## விடாக் கழிச்சல் குணமாக

35. சாதிக்காய், அதிவிடயம், சாதிப்பத்திரி இவை அனைத்தையும் சமனெடை எடுத்து நல்லெண்ணெய் விட்டு அரைத்து தினம் ஒருவேளை அரைக்கரண்டி அளவு பிள்ளைப்பாலில் கொடுத்துவர விடாக் கழிச்சல் தீரும்.

36. சாதிக்காய், சாதிப்பத்திரி, இலவங்கம், ஏலம், அதிமதுரம், அதிவிடயம், அபின், கஞ்சா, குரோசணி, முத்தக்காசு, வெந்தயம், சீரகம், சிறுநாகப்பூ, புளியாரை, காட்டாத்திப்பூ, மாதுளம்பிஞ்சு, வாழைப்பூ சமனெடை சேர்த்து நன்ருக இடித்து ஆவின்பாலில் பிட்டவியலாய் அவித்து வாழைப்பூச் சாற்றிலாவது, மாதுளம் பழச் சாற்றிலாவது அரைத்து மிளகு அளவு உருண்டை செய்து சர்க்கரை அல்லது தேனில் குழைத்துக் கொடுக்க சகல விதமான கழிச்சல் நோய்களும் தீரும் (முத்தகாசு=கோரைக் கிழங்கு).

37. புளியாரை, வாழைப்பூ, சமனெடை யிடித்து பிட்டவியலாக அவித்து அவற்றைச் சாறு பிழிந்து ஒரு கரண்டி தேன் விட்டுக் கொடுத்து வர சகல விதமான கழிச்சலும் குணமாகும்.

### பச்சிலைபோல் கழிச்சலுக்கு

38. ஏலம், சாத்திரபேதி, மதுரம் வகைக்கு அரை விராகனெடை எடுத்து புளித்த காடி விட்டரைத்து மூன்று நாட்கள் கொடுத்து வர பச்சிலைபோல் கழிவது நின்றுவிடும்.

39. கோரோசனை, களிப்பாக்கு, சீரகம், காசுக் கட்டி இவைகளைச் சமனெடை எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து பாக்குப் பிரமாணம் பிள்ளைப் பாலில் கரைத்துக் கொடுக்க சகல விதமான கழிச்சலும் தீரும்.

40. தைவேளை இலை, வசம்பு, பூண்டு இவைகளைத் தட்டி நெருப்பில் வெதுப்பி சாறு பிழிந்து கொடுத்துவர சகல விதமான கழிச்சலும் குணமாகும்.

### மாந்தக் கழிச்சல், மாந்த சன்னி

41. சட்டியைக் காயவைத்து, அதில் ஒரு சிரங்கை உப்புப் போட்டு வறுத்து சாம்பலாக்கிக் கொண்டு ஒரு தேர்வசம்பைப் போட்டு கருக்கி தீப்பற்றி வரும் பொழுது, ஒரு பிடி தூதுவளையை மூன்று அறுப்பாய்ச் செய்து போட்டு பொன்னிற மாய் வறுத்துப் பின்னர் சிரங்கை நீர் தெளித்து இவை சுண்டு மட்டும் வறுத்துக் கொள்ளவேண்டும்.

இவ்வாறு இரண்டு தடவை நீர் தெளித்து சுண்ட வறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். அதன் பின் ஒரு படி நீர் விட்டு எட்டொன்ருய்க் காய்ச்சி இறக்கி வைத்துக்கொண்டு தினம் ஒரு சங்கு அளவு கொடுத்துவர மாந்தக் கழிச்சல் மாந்த சன்னி தீரும்.

### விஷ சுரம், வலிப்பு, ஜன்னி

42. சாதிக்காய், கிராம்பு, ஓமம், கரிய சீரகம், சுக்கு, திப்பிலி, கஸ்தூரி மஞ்சள், வசம்பு, பால், பெருங்காயம், வெள்ளை காக்கணன் வேர்ப்பட்டை— இவற்றை சமனெடை எடுத்து வெந்நீர் விட்டு நன்ருக அரைத்து சுண்டைக்காயளவு உருண்டை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

தினம் காலையில் ஒரு குளிகை வெந்நீரில் கலக்கிக் கொடுத்துவர மூன்று நாட்களில் சளி, இருமல், கக்கல், காய்ச்சல், விஷ சுரம், வலிப்பு, ஜன்னி, வயிற்றுப் பொருமல் குணமாகும்.

பேதி அதிகமானல் வசம்பைச் சுட்டு வெந்நீரில் கலக்கிக் கொடுக்க மலக்கட்டு ஏற்படும்.

### விஷ தோஷம், சன்னி மாந்தம், வாந்தி, பித்த சுரம்

43. கஸ்தூரி, குங்குமப்பூ, கோரோசனை முறையே ஒரு கழஞ்சு, இரு கழஞ்சு, மூன்று கழஞ்சு என்ற அளவில் ஒன்று சேர்த்து கல்வத்திலிட்டு பிள்ளைப் பாலால் ஏழு மணி நேரங்கள் அரைத்து குன்றிமணி அளவில் உருண்டை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

தினம் ஒரு உருண்டை பிள்ளைப்பாலில் கலக்கிக் கொடுக்க விஷ தோஷம், சன்னிமாந்தம், பித்த சுரம், வாந்தி போன்ற நோய்கள் குணமாகும்.

**கண சுரம், வாந்தி, பித்தம், வயிற்றுக் கழிச்சல்**

44. திரிகடுகு, வெங்காரம், சாதிலிங்கம்—வகைக்குப் பலம் ஒன்று. இவற்றை எலுமிச்சம்பழச் சாற்றால் ஏழு மணி நேரம் அரைத்து சிறுபயறு அளவில் உருண்டை செய்து உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும் (திரிகடுகம்: சுக்கு, திப்பிலி, மிளகு).

துளசி, செம்முள்ளி, ஆடாதோடை, தூதுவளை, விஷ்ணுகாந்தி, கண்டங்கத்திரி, வெதுப்படக்கி, பேய்ப் புடல், சங்கு, நொச்சி ஆகியவைகளின் இலைகளை இடித்து பிட்டவித்துச் சாறு பிழிந்து—அந்த சாற்றில் மேற்கூறிய உருண்டையில் ஒன்றும், அந்த அளவு கோரோசனையும், திரிகடுகு வறுத்துப் பொடித்த அந்த அளவு தூளும் கலந்து கடிகைப் பிரமாணம் கொடுத்துவர—கண சுரம், வாந்தி, பித்தம், வயிற்றுக் கழிச்சல் குணமாகும்.

**''மாந்த சுரம்—தோஷம்''**

45. ஆமணக்கெண்ணெய் ஒரு படி, நுரைச்சாறு படி $\frac{1}{2}$, ஈருள்ளிச் சாறு படி $\frac{1}{4}$, வெந்தயம் பலம் $\frac{1}{2}$ இவற்றை அரைத்துப் போட்டு பதமாய்க் காய்ச்சி இறக்கி வைத்துக்கொள்ள வேண்டும்.

தினம் சிறு கரண்டி அளவு கொடுத்துவர மாந்த சுரம், தோஷம் குணமாகும்.

### மாந்த சுரம்—சகல சுரங்கள்

46. பச்சை கற்பூரம், லவங்கம், வால் மிளகு, சிறு நாகப்பூ, கடுகுரோகனி, ஏலம், சடாமாஞ்சில், சுக்கு, சிரகம்—வகைக்கு விராகனெடை கால். சுத்தி செய்த நேர்வாளம் விராகனெடை 2¼. இவற்றினை பொற்றிலைக் கரப்பான் சாறு விட்டு 9 நாட்கள் அரைத்து மிளகு அளவில் உருண்டை செய்து உலர வைத்து எடுத்து வைக்க வேண்டும்.

தினம் ஒரு குளிகை இஞ்சி, தேன், பிள்ளைப் பால் ஆகிய ஏதாவது ஒன்றில் கொடுத்து வந்தால் மாந்த சுரம், இதர சகல சுரங்களும் குணமாகும்.

### மாந்த சுரம்

47. உள்ளி, அவுரி, குட்டி விளா இவைகளைச் சமனெடை எடுத்து சிவக்க வறுத்து கியாழம் செய்து சங்களவு கொடுத்துவர மாந்த சுரம் தீரும்.

### மாந்த கண சுரம், வாந்தி, வயிற்றுப் பொருமல்

48. ரச செந்தூரம், *திரிபலாதி, குங்குமப்பூ, கஸ்தூரி, ஏலம், *திரிகடுகு, கோரோசனை வகைக்குப் பலம் கால். கிராம்பு விராகனெடை ஒன்று. இவற்றை கருநொச்சி சாற்றால் அரைத்து சிறு பயறு அளவு உருண்டை செய்து உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். துளசிச் சாற்றில் தினம் ஒரு மாத்திரை கொடுத்து வந்தால் மாந்த கண சுரம், வாந்தி, வயிற்றுப் பொருமல் குணமாகும். (*திரிகடுகு = சுக்கு, திப்பிலி, மிளகு)

(*திரிபலாதி = கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்)

## வாத-பித்த-சிலேத்பன சுரம்

49. கோரோசனை விராகனெடை நான்கு; கடுகுரோகணி, சுத்தி செய்த நேர்வாளம் வகைக்கு விராகனெடை இரண்டு; இவற்றை பிள்ளைப்பாலில் அரைத்து சிறுபயறுபோல் உருண்டை செய்து நிழல் காய்ச்சலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

வாதசுரமானல் முறித்த இஞ்சி சாற்றிலும், பித்தசுரமானல் பிள்ளைப்பாலிலும், சிலேத்பன சுரமானல்—ஆடாதோடை, கண்டங்கத்தரி, தூதுவளை இவற்றை இடித்து பிட்டவித்துப் பிழிந்து அந்த சாற்றிலும் தினம் ஒரு மாத்திரை கொடுத்து வர வாத, பித்த, சிலேத்பன சுரங்கள் குணமாகும்.

## மாந்தம், வயிற்றுப் பொருமல்

50. வேலிப்பருத்தி இலையை வதக்கிச் சாறு பிழிந்து அதில் ஓமம், வசம்பு சமனெடை எடுத்து லேசாக வருத்துப் பொடி செய்து போட்டு காய்ச்சி வைத்துக்கொள்ள வேண்டும். தினம் ஒரு சங்கு அளவு கொடுத்துவர மாந்தம், வயிற்றுப் பொருமல் குணமாகும்.

51. வறுத்த ஓமம் விராகனெடை ஒன்று. குப்பைமேணி வேர்பட்டை பலம் இரண்டு. இவற்றை அரைப்படி தண்ணீரில் வற்றக் காய்ச்சி தினம் ஒரு சங்கு அளவு கொடுத்துவர மாந்தம், வயிற்றுப் பொருமல் தீரும்.

52. வசம்பு, சுக்கு, திப்பிலி, மிளகு, கோரோசனை வகைக்கு விராகனெடை இரண்டு.

வேலிப்பருத்திக் கொழுந்து விராகனெடை நான்கு. இவை அனைத்தையும் நன்ருக அரைத்துக்கொள்ள வேண்டும். வேலிப்பருத்தி இலைச்சாறு அரைக்கால் படி. இந்த சாற்றில் மேற்கூறியவற்றைக் கலக்கிக் காய்ச்ச வேண்டும். பக்குவம் வந்ததும் இறக்கிவிட வேண்டும். லேகிய பதத்தில் இறக்குவது பக்குவம். வடிகட்டிய பின் பக்குவமான சாற்றை தினம் ஒரு சங்களவு கொடுத்துவர மாந்தம், வயிற்றுப் பொருமல் தீரும்.

53. பொடுதலை, மா, புளி, வேம்பு, நுணா, வேலிப்பருத்தி, நொச்சி ஆகியவைகளின் ஈர்க்கு ஒவ்வொரு பிடி. வெள்ளுள்ளி, திப்பிலி, ஓமம் வகைக்கு ஒரு கழஞ்சு எடை (40 குன்றிமணி எடை) இவை அனைத்தையும் இடித்து ஒரு படி தண்ணீரில் போட்டு காய்ச்சி, கியாழம் செய்து மூன்று நாட்கள் கொடுத்துவர ஊதுமாந்தம், போர் மாந்தம், செரியா மாந்தம், சத்தி மாந்தம் ஆகியவை நிவர்த்தியாகும்.

### நீர் கண மாந்தம்

54. அதிமதுரம், கோஷ்டம், ஏலம், கோரோசனை, சாஸ்திர பேதி, சண்பகப்பூ, மாசக்காய், லவங்கப்பூ—வகைக்குப் பலம் கால். இவற்றைக் கல்வத்திலிட்டு அரைக்க வேண்டும். அவ்வாறு அரைப்பதற்கு வெட்டிவேர், மாசிபத்திரி, கருந்துளசி, விலாமிச்சு ஆகிய நால்வகை மூலிகைச் சாற்ருல் ஒரு நாள் முழுதும் அரைத்து குன்றிமணி

அளவு உருண்டை செய்ய வேண்டும். நிழல் காய்ச்சலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

நீர்கண மாந்தத்திற்கு மாசிபத்திரி கியாழத்தில் தினம் ஒரு மாத்திரை கொடுத்துவர குணமாகும். இலவங்கப்பூ கியாழத்தில் தினம் ஒரு மாத்திரை கொடுத்துவர மாந்த சுரம், வாந்தி, மாந்தம் தீரும். பிள்ளைப்பாலில் ஒரு மாத்திரை கொடுத்துவர குடல் படுவன், நீர்பாடு மாந்தம், கரப்பான், நாவரட்சி, வயிற்றெரிவு, உப்பிசம், இருமல் குணமாகும்.

55. செண்பகப்பூ விராகனெடை பத்து. சாதிப்பத்திரி, கோரோசனை வகைக்கு விராக னெடை அரை. இவற்றைப் பொடித்து ஒரு படி ஆமணக்கு எண்ணெயில் போட்டு கொதிக்க வைத்து எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு சிறு கரண்டி அளவு தினம் ஒரு வேளை கொடுத்துவர நீர்கண மாந்தம் குணமாகும்.

56. உள்ளி, வசம்பு, உசிலம் பட்டை. சம னெடை எடுத்துத் தட்டி, தண்ணீரில் போட்டு காய்ச்சி கியாழம் செய்து தினம் ஒரு வேளை கொடுத்துவர நீர்கண மாந்தம் குணமாகும்.

57. வேலிப் பருத்தி, பெருந்தும்பை, வெதுப் படக்கி, தூதுவளை, நொச்சி இவற்றை வதக்கிச் சாறு பிழிந்து அந்த சாற்றில் சுட்ட வசம்பு, சிறு தேக்கு, ஆமை ஓடு ஆகியவற்றின் சுட்ட கரி சமமாய் அரைத்துக் கலக்கிக் கொடுக்க நீர்கண மாந்தம் தீரும்.

58. வெங்காரம் விராகனெடை அரை. கடுகு ரோகனி, கருஞ்சீரகம் வகைக்கு விராகனெடை இரண்டு. இவற்றைப் பிள்ளைப்பாலில் அரைத்து குண்டுமணி அளவு மாத்திரைகளாக்கி உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும். இந்த மாத்திரையை தினம் ஒன்று வெந்நீரில் கொடுத்துவர ஊதுமாந்தம் நீங்கும்.

59. பொடுதலை, கரியுப்பு இவற்றை இடித்துப் பிழிந்து அதன் சாற்றை உலையில் கொதிக்க வைத்த செப்புக் கம்பியை உள்ளிட்டு முறித்து அல்லது சாறு கொதித்து வரும்பொழுது கொதித்திடும் செப்புக் கம்பியை உள்ளிட்டு முறித்து அதன் பின் அந்த பக்குவமான சாற்றைத் தினம் ஒரு சங்கு அளவு கொடுத்துவர மாந்தம் குணமாகும்.

60. வெற்றிலைக் காம்பு, வசம்பு, உள்ளி, திப்பிலி இவற்றை வதக்கி வெந்நீரில் அரைத்துக் கொடுத்துவர மாந்தம் குணமாகும்.

61. ஓமம், வெள்ளுள்ளி, மிளகு, திப்பிலி, சுக்கு இவற்றை அரைத்து ஒரு துணியில் முடி போட்டு தண்ணீரில் போட்டு காய்ச்சி வற்ற வைத்து பின்னர் தினம் கொடுத்துவர மாந்தம் குணமாகும்.

62. விலா இலையை வதக்கி சாறு பிழிந்து அதில் ஆமை ஓடு, வசம்பு, வட்டத்திருப்பி இவைகளைச் சுட்டு இவற்றைச் சாற்றில் கலக்கி தினம் கொடுத்துவர மாந்தம் குணமாகும்.

63. தூதுவளை வேர், சுக்கு, வெந்தயம், வெள்ளைப்பூண்டு, வசம்பு, ஓமம் இவற்றை வறுத்து கஷாயம் செய்து தினம் கொடுத்துவர மாந்தம் தீரும்.

64. நுரை, நொச்சி, கழற்கொடி இவற்றை சட்டியில் வதக்கி தண்ணீர் விட்டு காய்ச்ச வேண்டும். அதில் வசம்பு, ஓமம், சுக்கு, மிளகு, பொடுதலை, திப்பிலி ஆகியவைகளை எண்ணெய் விட்டு சிவக்க வறுத்து துணியில் முடிந்து போட்டு வற்றக் காய்ச்ச வேண்டும். இவற்றில் தினம் ஒரு சங்கு அளவு கொடுத்துவர சகல மாந்தங்களும் தீரும்.

65. வேலிப்பருத்தியிலை, தூதுவளை வேர், நொச்சி, பொடுதலை, நுரை, முருங்கை ஈர்க்கு ஆகியவற்றை வறுத்து தண்ணீர் விட்டுக் காய்ச்சி அவற்றில் ஓமம், திரிகடுகு, வசம்பு ஆகியவற்றை வதக்கி துணியில் முடிந்துபோட்டு வற்றக் காய்ச்சி தினம் ஒருவேளை கொடுத்துவர மாந்தங்கள் குணமாகும்.

### ஊது மாந்தம்

66. வெங்காரம் விராகனெடை அரை. கடுகு ரோகணி, கருஞ்சீரகம் விராகனெடை இரண்டு. இவற்றைப் பிள்ளைப்பாலில் நன்ருக அரைத்து உருண்டை செய்து உலர்த்தி வைத்துக்கொண்டு வெந்நீரில் ஒரு மாத்திரை தினம் கொடுத்துவந்தால் ஊதுமாந்தம் குணமாகும்.

தவிர பொடுதலை, வேம்பு, மா, புளி, நொச்சி, வேலிப்பருத்தி ஈர்க்கையும், ஓமம், உள்ளி,

திப்பிலியும் சமமாய் இடித்து தண்ணீர் விட்டு காய்ச்சி கஷாயமாக்கி இந்த கஷாயத்தில் மேற் கூறிய மாத்திரையைக் கலக்கிக் கொடுத்தால் விரைவில் ஊதுமாந்தம் குணமாகும்.

67. கோரோசனை, உள்ளி, திப்பிலி, மதுரம் இவை சமனெடை எடுத்து முட்டையின் வெள்ளைக் கரு விட்டு நன்ருக அரைத்து பிள்ளைப்பாலில் மூன்று தினங்கள் கொடுக்க ஊதுமாந்தம் தீரும்.

68. வேலிப்பருத்தி இலையை வதக்கிச் சாறு பிழிந்து அதில் சீரகம், கடுகுரோகணி இவற்றைச் சமனெடை எடுத்துப் பிள்ளைப்பாலில் அரைத்துக் கலக்கி சங்களவு கொடுத்துவர ஊதுமாந்தம் குணமாகும்.

### நீர்மாந்தம்

69. பூரம் விராகனெடை ஒன்று. சுத்தி செய்த நேர்வாளம், மிளகு, லவங்கம் விராகனெடை தலா இரண்டு. இவை அனைத்தையும் நன்ருக அரைத்துக்கொண்டு—பத்துப் பலம் எடையுள்ள சிற்ருமணக்கு எண்ணெயில் கலந்து காய்ச்சி பதம் வந்ததும் இறக்கிவிட வேண்டும். சிறு கரண்டி அளவு தினம் கொடுத்துவர மூன்று நாட்களில் நீர்மாந்தம் குணமாகும்.

70. ஈருள்ளி, மூக்குரட்டைச் சாறு, ஆமணக்கு நெய் சமனெடை கலந்து காய்ச்சி சிறு கரண்டி அளவு தினம் கொடுத்துவர நீர்மாந்தம் தீரும்.

### நீர்மாந்தம்

71. நொச்சி, தூதுவளை, குப்பைமேனி, நுணு, பெருந்தும்பை ஆகியவைகளின் இலையைத் தட்டி சற்று சூட்டில் வெதுப்பி சாறு பிழிந்து அந்த சாற்றில் மிளகு, உள்ளி, வசம்பு, ஓமம் இவைகளை வறுத்து அரைத்துக் கலக்கிக் கொடுக்கவும். தினம் ஒரு கரண்டியளவு கொடுத்துவர நீர்மாந்தம் குணமடையும்.

### போர் மாந்தம்

72. ஓமத்தை வறுத்துப் பொடி செய்து பிள்ளைப்பாலில் கலக்கிக் கொடுக்கவும். தினம் ஒரு சங்கு அளவு கொடுத்துவர போர் மாந்தம் தீரும்.

73. ஒரு சட்டியில் உப்பை வறுத்துக்கொண்டு அதில் வேலிப்பருத்தி, தும்பை, வெற்றிலைச் சம னெடை எடுத்து, அரைத்துச் சாறு பிழிந்து ஊற்ற வேண்டும். கொதித்ததும் இறக்கிவிட வேண்டும். இந்த சாற்றில் ஆமையோடும், வசம்பும் சுட்டு அந்தக் கரியை உரைத்து தினம் ஒரு சங்களவு கொடுத்துவந்தால் போர் மாந்தம் நின்றுவிடும்.

### பால் மாந்தம்

74. இந்துப்பு, சுட்ட வசம்பு, பூடு, மிளகு இவற்றைப் பொடுதலைச் சாறு விட்டு அரைத்து கஷாயமாக நீர் விட்டு காய்ச்சி எடுத்துக்கொண்டு தினம் சங்களவு கொடுத்துவர பால் மாந்தம் போகும்.

75. வசம்பு, சடாமஞ்சி, உள்ளி, திரிகடுகு, ஓமம், கருஞ்சீரகம், சுட்ட ஆமையோடு இவை அனைத்தையும் பொடி செய்து நீரில் காய்ச்சி கஷாயம் செய்து தினம் ஒரு சங்களவு கொடுத்துவர செரியா மாந்தம் குணமாகும்.

76. வேலிப்பருத்தி இலையை வதக்கிப் பிழிந்து அந்த சாற்றில் மிளகு, வசம்பு, உள்ளி ஆகியவற்றை நன்றாக அரைத்து சூடான சட்டியில் வெதுப்பிக் கலந்து கொதிக்கவைக்க வேண்டும். பதமான பின் இறக்கிய சாற்றில் பசுவின் நெய் சிறு அளவு விட்டு தினம் சங்களவு கொடுத்துவர செரியா மாந்தம் தீரும்.

77. ஓமம், கோஷ்டம், வசம்பு இவற்றைத் தட்டி தண்ணீரில் போட்டு காய்ச்சி கஷாயம் செய்து தேன் கலந்து ஒரு கரண்டி அளவு தினம் கொடுத்துவர செரியா மாந்தம் குணமடையும்.

### கணமாந்தம், வயிற்றுளைவு, பொருமல்

78. சுத்தி செய்த வெள்ளை துத்தம், வெங்காரம், கோரோசனை, கொழுஞ்சி, கடுகு ரோகனி சமனெடை எடுத்து அகத்தி இலைச் சாறு விட்டு பன்னிரண்டு மணி நேரம் அரைத்து சிறு பயறு அளவு உருண்டை செய்து, நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். தினம் ஒரு மாத்திரைப் பிள்ளைப்பாலில் கலந்து கொடுக்க கண

மாந்தம், வயிற்றுளைவு, வயிற்றுப் பொருமல் குணமாகும்.

### தெற்கத்து கணமாந்தம், போர் மாந்தம்

79. வசம்பு, ஓமம், வெள்ளுள்ளி, பெருங் காயம் வகைக்குப் பலம் கால். இவற்றைத் தூள் செய்து அரைப்படி வேப்பெண்ணெயில் கலந்து முப்பது நிமிடங்கள் கொதிக்க வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும். பின்னர் இவற்றை ஆறு நாட்கள் ரவி புடம் வைத்து (சூரிய வெயிலில் வைத்து) குழந்தைகளின் நிதானம் தெரிந்து மருந்தின் அளவு கொடுத்துவர வேண்டும். தினம் ஒரு சிறு கரண்டியளவு கொடுத்துவரலாம். தெற்கத்து கணமாந்தம், போர்மாந்தம் ஆகிய நோய்கள் குணமாகும்.

80. முருங்கைப்பட்டை, நொச்சிப்பட்டை, வெள்ளெருக்குப்பட்டை வகைக்கு ஒரு பிடி. ஒரு தலைப்பூண்டு பலம் ஒன்று. வசம்பு அரத்தை வகைக்கு விராகனெடை ஒன்று. இவைகள் அனைத்தையும் கட்டி ஒன்றாய்க் கலந்துகொண்டு வேலிப்பருத்தி, குப்பைமேனி ஆகியவற்றின் இலைச் சாறு, வெள்ளெருக்கம் பழுப்பு இலைச்சாறு வகைக்குப் படி கால், வேப்பெண்ணெய் படி அரை— ஆகியவற்றுடன் ஒன்று கலந்து காய்ச்ச வேண்டும். பதமானபின்பு இறக்கி வைத்துக்கொண்டு தினம் சிறு கரண்டி அளவு கொடுத்துவந்தால் தெற்கத்து கண மாந்தம், போர் மாந்தம் குணமடையும்.

## கடுப்பு நோய்கள்

### கிராணி கடுப்பு

81. எலுமிச்சம்பழச் சாற்றில் வெங்தயத்தை வேகவைத்து உண்ண கிராணி கடுப்புக்கள் குணமாகும்.

82. கோரோசனை, சண்பகப்பூ, கோட்டம், வெட்டிவேர், ஏலம், அதிமதுரம், சாத்திரபேதி, மாசிப்பச்சை, தான்றிக்காய், இவை ஒவ்வொன்றிலும் இரண்டு விராகனெடை எடுத்து வெட்டிவேர் கியாழத்திலும், பிள்ளைப் பாலிலும் அரைத்து குன்றிமணி அளவு உருண்டை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

தினம் ஒரு மாத்திரை பிள்ளைப் பாலில் கலந்து கொடுத்துவர கிராணி கடுப்பு மாந்தம், சன்னி, கழிச்சல், பிரளி, குடல் புரட்டல் நீங்கும்.

### இரத்தக் கடுப்பு

83. விலாம்பிசின், உள்ளி. இவற்றை அரைத்துத் தயிரில் கலந்து கொடுத்துவர இரத்தக் கடுப்பு குணமாகும்.

84. சாதிக்காய், சாதிப்பத்திரி, லவங்கப் பட்டை, கிராம்பு, மல்லி, கோட்டம், கோரோசனை, சண்பகப்பூ, அதிமதுரம், கார்கோலரிசி, சீரகம், லவங்கப்பத்திரி, செங்கழுநீர்க்கிழங்கு, ஏலம்—ஆகியவை வகைக்குப் பலம் கால். இவற்றினைக் கல்வத்திலிட்டு நன்றாக அரைத்துக்கொள்ள வேண்டும். பின்னர் ஆமணக்கெண்ணெய் பலம்

பன்னிரண்டு, பசுவின் நெய் பலம் ஆறு, நல்லெண்ணெய் பலம் மூன்று, முருங்கை இலைச் சாறு பலம் பதினாறு ஆகியவைகளை ஒன்றாகக் கலந்து இவற்றில் கல்வத்தில் அரைத்துள்ள மருந்துச் சரக்குகளைக் கலந்து காய்ச்சி லேகிய பதத்தில் இறக்கி விட வேண்டும்.

காய்ச்சிய எண்ணெயில் தினம் ஒரு சங்கு அளவு கொடுத்துவர இரத்தக்கடுப்பு, மாந்தம், சன்னி, பிரளி, கழிச்சல், குடல் புரட்டல் ஆகிய வியாதிகள் குணமாகும்.

85. ஆவின் பால் ஒரு படி, வெந்தயம் ஒரு பலம். பாலில் வெந்தயத்தை வேகவைத்து, இறக்கி வெல்லமும், நெய்யும் விட்டு கிண்டி வைத்துக் கொள்ள வேண்டும். அதிகாலையிலும், மாலையிலும் உணவுக்கு முன்னர் கொடுக்க இரத்தக் கடுப்பு குணமாகும். குழந்தைகளும், பெரியவர்களும் இதைப் பயன்படுத்தலாம்.

### முக்கல், வயிற்றுக் கடுப்பு

86. பருத்திப் பிஞ்சு, சாதிக்காய், கிராம்பு, அதிவிடயம், அரத்தை, அசமதாகம், இலந்தைப் பழம் ஆகியவை சமனெடை எடுத்து அரைத்துத் தயிரில் கலந்து உண்ண முக்கல், வயிற்றுக்கடுப்பு குணமாகும்.

87. பசுவின் பாலில் பருத்திப் பிஞ்சு, சீரகம் இவற்றைச் சமனெடை எடுத்து அரைத்துக் கலக்கி குடிக்க வயிற்றுக் கடுப்பு குணமாகும்.

## சிரங்குகள்

### சிரங்கு, சொரிசிரங்கு, கரப்பான், ஆருத புண்கள்

88. அரிதாரம் பலம் கால், சேங்கொட்டை இருபது—இவைகளை நறுக்கி ஒரு படி நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்ச வேண்டும். சேங்கொட்டை வெடிக்கும் பதத்தில் கீழே இறக்கிவிட வேண்டும். உடம்பில் காலையில் தேய்த்து சாரவிட்டு மாலையில் அரைப்புத் தேய்த்துக் குளித்துவர சொரிசிரங்கு குணமாகும்.

89. கல்லுப்பு, மரமஞ்சள், மிளகு, கருஞ்சீரகம் வகைக்குப் பலம் கால். இவற்றைப் பொடித்து இரண்டு படி தேங்காய்ப் பாலில் கலக்கிக் காய்ச்ச வேண்டும். நெய் பதத்தில் இறக்கி, நெய்யை வடித்து உடம்பில் பூசி மாலையில் அரைப்புத் தேய்த்துக் குளித்துவர சிரங்கு, சொரி சிரங்கு குணமாகும்.

90. துருசு, கந்தகம், குங்கிலியம் சமனெடை எடுத்து அரைத்து ஆமணக்கெண்ணெயில் கலந்து சூரிய வெயிலில் சூடாக்கிப் பின் களிம்புபோல் அரைத்து வைத்துக்கொள்ள வேண்டும். சிரங்கு, புண்களுக்கு நல்ல களிம்பு. இதைப் போட்டுவர குணமாகும்.

91. காட்டுச் சீரகம், கார்கோலரிசி, கஸ்தூரி மஞ்சள், ஏலம், கடுக்காய், நீர்வெட்டி முத்து இவற்றைச் சமனெடை எடுத்து நன்றாக பொடிக்க வேண்டும். அதற்குச் சமனெடை மிளகுத் தூள்

சேர்த்துக் கலக்க வேண்டும். இவற்றை ஊமத்தங் காயைக் குடைந்து அதற்குள் திணிக்க வேண்டும். பின்னர் காய்ந்த எருப் புடமிடம் போட்டு எடுத்துக் கொள்ள வேண்டும். புடம் போட்டு எடுத்த மருந்தை தேங்காய் எண்ணெய் விட்டு அரைத்து மூன்று நாட்கள் சூரிய புடம் வைத்து சிரங்கின்மேல் தடவிவர நமைச்சல், சொரிசிரங்கு குணமாகும்.

92. நீர்வெட்டி முத்து, சந்தனம் சமனெடை அரைத்துச் சிரங்கில் தடவிவர சொரிசிரங்குகள் உதிர்ந்து குணமாகும்.

93. வெந்தோன்றிக்கிழங்கு, பச்சைகற்பூரம், கந்தகம் வகைக்குப் பலம் கால். இவற்றை அரைத்து கால்படி நல்லெண்ணெயில் கலக்கிப் பதமாய்க் காய்ச்சி காலையில் சிரங்கில் பூசி மாலையில் இலுப்பை அரைப்பு, வேப்பிலை இவ்விரண்டையும் சமமாய் அரைத்து உடம்பில் தேய்த்துக் குளித்துவர சகல சொரிசிரங்குகளும் குணமாகும்.

### பேய்ச் சிரங்கு

94. இந்துப்பு பொடியாக்கி நெய்யில் கலந்து சூரிய வெயிலில் காயவைத்து உடம்பில் பூசி வைத்திருந்து மறுநாள் குளிக்க பேய்ச்சிரங்குகள் குணமாகும்.

95. ஏலம், மிளகு, கார்க்கோலரசி, கந்தகம், சூடன், பிராய்ப்பட்டை வகைக்கு ஒரு விராகனெடை இவற்றைப் பொடித்து அரைக்கால் படி நல்லெண்ணெயில் கலக்கி காய்ச்சி உடம்பில் தடவி மாலையில் இலுப்பை அரைப்புப் போட்டுக் குளித்துவர பேய்ச்சிரங்கு குணமாகும்.

## அடித் தள்ளினல்

96. கரிசலாங்கண்ணி, பழம்புளி சமனெடை எடுத்து அரைத்து நீரில் கலக்கி தினம் ஒரு சங்களவு கொடுத்துவர எட்டு நாள்கள் வெளியில் தள்ளும் உறுப்பு உள்ளே போய்விடும். குணமாகிவிடும்.

97. இஞ்சியை மேற்றேல் சீவி அதில் துவார மிட்டு ஒரு விராகனெடை பெருங்காயத்தை துவாரத்தினுள் பொதித்துவிட வேண்டும். இந்த இஞ்சியை ஒரு நூலில் கட்டி தயிரில் வேகவைத்து விட வேண்டும். பின் வெந்துபோன இஞ்சியை எடுத்துப் புதிய தயிரில் அரைத்து தினம் ஒரு சங்களவு கொடுத்துவர, அடித்தள்ளியது மறைந்து குணமாகிவிடும்.

## ரணங்களுக்குக் களிம்பு

98. குங்கிலியம் பலம் ஒன்று பசு வெண்ணெ யில் கலந்து அரைத்து பிளாஸ்திரியாகப் போட்டுவர ரணங்கள் ஆறும்.

99. லிங்கம், துத்தம், மிருதூர்சிங்கி, குங்கி லியம், ரசகற்பூரம், கடுக்காய், மாசிக்காய் இவற்றைச் சமனெடை எடுத்து பசுவெண்ணெயில் மூன்று நாட்கள் அரைத்துப் பின்னர் பன்னீரில் அரைத்து சீசாவில் அடைத்துக்கொள்ள வேண்டும். ரணங்களுக்குக் களிம்பாகப் போட்டுவர குண மாகும்.

## உரம் விழுந்தால்

100. வெள்ளைப் பூண்டு, கடுகு இவற்றில் சமனெடை எடுத்து ஒன்ருகக் கலந்து ஒரு சட்டிக்குள்

வைத்து மூடிவிட வேண்டும். இதை ஒரு குழிக்குள் வைத்து மேலே நெறுப்பேற்றி சூடுபடுத்திஞல் குழிக்குள் உள்ள கலபம் சூடாகி தைலமாகிவிடும். இந்தத் தைலத்தை உடம்பில் பூசிஞல் உரம் விழுந்து அழும் குழந்தை குணமாகும்.

### தலை வலிக்கு நசியம்

*101*. பெருங்காயம், ஓமம், சுக்கு சம னெடை எடுத்து பிள்ளைப் பாலில் அரைத்துத் துணியில் தடவி திரித்துக் காயவைத்தப் பின் தீயிலிட்டு நசியம் பிடித்திட தலைவலி குணமாகும்.

### தந்த நோய்

*102*. அரம், அக்கிரகாரம், படிகாரம், மிருதூர் சிங்கி, லவங்கப்பட்டை, காசுக்கட்டி, துருசு இவற்றைச் சமனெடை எடுத்து எலுமிச்சம் பழச் சாற்றில் 48 மணிநேரம் அரைத்து சீசாவில் வைத்துக் கொள்ள வேண்டும். நான்கு நாட்கள் பல் தேய்த்து வர தந்த நோய்கள் குணமாகும்.

### பல்வகை நோய்களுக்கு

*103* உருளைக் கிழங்கு: கொதி நீர் கொட்டி புண்ணுகி விட்டால், நெருப்புப் பட்டு புண்ணுகி விட்டால் உடனே உருளைக் கிழங்கை அரைத்துத் தடவிஞல் நீர்க் கொப்புளம் ஏற்படாது. எரிச்சல் குறையும், புண்ணுகாமல் குணமாகிவிடும்.

*104*. ஆடுதின்ஞபாலை: இதன் பச்சிலையை அரைத்து ஆமணக்கு நெய்யில் குழப்பி கரப்பான் புண்களின் மேல் தடவிஞல் புண்கள் ஆறிவிடும்.

**105. ஆனை நெருஞ்சில்:** இதன் பச்சிலையை நீரில் அரைத்துக் கலக்கி அந்த பச்சிலைச் சாற்றைக் குடிக்க நீர்க் கடுப்பு, நீர் எரிவு குணமாகும்.

**106. ஒதியம்பட்டை:** இதனைப் பொடி செய்து வேப்பெண்ணெயில் கலந்து ஆறுப்புண்களுக்குப் போட்டுவர குணமாகும்.

**107. மாங்கொட்டை:** இதன் பருப்பை உலர்த்தித் தூள் செய்து வைத்துக்கொள்ள வேண்டும். இவற்றை தேன் கலந்து வெல்லத்தில் சிறிது சேர்த்து உட்கொண்டால் குடலில் உள்ள பூச்சிகள் செத்து விழும்.

பெண்களின் மாதவிடாய் அதிகமானால் இதனை உட்கெள்ள நிற்கும், மூலத்திலிருந்து இரத்தம் போவதும் நிற்கும்.

**108. மாசிக்காய்:** இவற்றைப் பொடி செய்து வைத்துக் கொள்ள வேண்டும். இவற்றுடன் மிகச் சிறு அளவு அபின் சேர்த்து தேனில் குழைத்துக் கொடுத்தால் வயிற்றுப் போக்குக் குணமாகும். அபின் சேர்க்காவிட்டாலும் தினம் மூன்று தடவைகள் உட்கொள்ள குணமாகும்.

மாசிக்காய்ப் பொடியை சிறிது கொதி நீரில் போட்டு ஆறிய பின்னர் வடிகட்டி தினம் மூன்று தடவை உட்கொள்ள வயிற்றுக் கடுப்பு குணமாகும்.

மாசிக்காய்ப் பொடியை வெண்ணெய் அல்லது பாலில் கலந்து தினம் இரண்டு வேளைகள் உட்கொள்ள வெள்ளை விழுதல் நின்று குணமாகும்.

மாசிக்காய்ப் பொடியை மூக்கில் சிறிது ஏற்றினால் பீனிசத்தால் மூக்கில் இரத்தம் கசிதல் நின்று குணமாகும்.

# வீட்டுக்கு ஒரு மருந்தகம்

அறம், பொருள், இன்பம்—இம்மூன்றும் கொண்டது வாழ்வு; அதுவே வீடு என்று கூறினர் திருவள்ளுவர்.

பசி தீர உணவு, நோய் தீர மருந்து, அறியாமை தீர நூல்—இம்மூன்றும் கொண்டது மனிதனின் உயிர் வாழ்வு—அதுவே குடும்பம், குடும்பம் உள்ளதே வீடு. இதனை செயல்படுத்தியவர்கள் சித்தர்கள்.

உணவகம், மருத்தகம், நூலகம்—இம்மூன்றும் கொண்டது இல்லம். அதுவே வீடு. வீட்டுக்கு ஒரு மருந்தகம் தேவை. குழந்தையின் கருவை உருவாக்கி வளரச்செய்பவள்-கு ழ ந் தை யை ப் பெற்றுத்தரு பவள் தாய். பெற்ற குழந்தையைப் பேணி வளர்த்து வருபவளும் தாய். நோய் நொடியில்லாது குழந்தை யைப் பாதுகாக்க-குடும்பத்தினரைப் பாதுகாக்க ஒரு மருந்தகம் தேவை அல்லவா!

''கை மருந்துகள்-செய் மருந்துகள்'' என்று நூற்று எட்டு மருந்துகளை—பல நூறுண்டுகாலமாக அனுபவத்தில் கையாண்டு வந்த இந்த அனுபவ மருந்துகளைக் கையாண்டு இன்றும் பயனடையலாம்.

எதற்கெடுத்தாலும் மருத்துவரைத் தேடி அலைந்து—பணவிரயம் செய்யாமல், அவசியத் தேவைக்கு மருத்துவரை நாடலாம். பசித்தால் உடனே உணவு விடுதிக்கு ஓடும் குடும்பத்தினராக வாழாமல் வீட்டுக்கு ஓர் உணவகம் இருப்பதுபோல்- வீட்டுக்கு ஒரு மருந்தகம் அமைக்க முன்வர வேண்டும். சித்தர்களின் சிந்தனை செயல்படுத்த வேண்டும். நோயற்ற-சீரான குடும்ப வாழ்வு சிறப்புற வேண்டும்.

ஆகவே சாதாரணமாக ஒரு குடும்பத்தில் உள்ள ஆண்கள், பெண்கள், குழந்தைகள், பெரியவர் களுக்கு வரக்கூடிய நோய்களைக் குணப்படுத்த பின் வரும் பதினான்கு அனுபவ மருந்துகளைச் செய்து வீட்டுக்கு ஒரு மருந்தகம் நிறுவிட முன்வரலாம்.

## பதினான்கு செய் மருந்துகள்

1. சுடர் தைலம், 2. சிறுகணைத் தைலம், 3. ரவணகுணாதிநெய், 4. திரிநேத்திரமை, 5. கட்டு வாதி லேகியம், 6. கட்டுவாதிக் குளிகை, 7. பால சஞ்சீவிக் குளிகை, 8. ரச குளிகை, 9. கஸ்தூரி மாத் திரை, 10. மாந்தசுர குளிகை, 11. செமி மாத் திரை, 12. கோரோசனை மாத்திரை, 13. லிங்க செந்தூரம், 14. தாளக பஸ்பம்.

இவை தவிர தேவைப்படும் மருந்துகளை—அனு பவித்துக் கொடுத்துக் கூறியுள்ள நூற்று எட்டு மருந்துகளிலிருந்தும் சிலவற்றைச் செய்து மருந்த கத்தில் வைத்துப் பயன் பெறலாம்.

## 1. சுடர் தைலம்

வேம்பு எண்ணெய் கால்படி, கெந்தகம் ஒன்றேகால் பலம், தாளகம் கால் பலம், வெள்ளைப் பூண்டு இரண்டரைப் பலம். இவற்றில் கெந்தகம், தாளகம் ஆகிய இரண்டையும் கல்வத்தில் போட்டு பொடி செய்து வெள்ளைத் துணியில் கிழிகட்ட வேண்டும். இதை ஒரு நீளக்கம்பியில் கட்டி விட வேண்டும். பின்னர் வெள்ளைப் பூண்டைத் தனியாக அரைத்து ஒரு சட்டியின் உள்பாகத்தில் தடவி வைத்து அந்த சட்டியினுள் கிழிகட்டிய கம்பியை உயர்த்திப் பிடிக்க வேண்டும். கிழியின்மீது வேம்பு எண்ணெயை ஒவ்வொரு கரண்டியாக ஊற்றி தீ வைத்து எரிக்க வேண்டும். கிழிகட்டிய மருந்து எரிந்து சுடர், சுடராக சட்டியினுள் விழும். இவ்வாறு வேம்பு எண்ணெய் முழுதும் தீர்ந்தபின் திரும்பவும் சட்டியிலுள்ள மருந்து கலந்த சுடர் எண்ணெயை சுடரில்விட்டு எரிக்கவும், கிழிகட்டிய மருந்திலிருந்து 'சுர்' என்ற சப்தம் வரும்வரை இவ்வாறு எரித்துவர வேண்டும்.

அதன் பின்னர் இந்த சுடர் தைலத்தை வடி கட்டி ஒரு பாட்டிலில் அடைத்துக்கொள்ள வேண்டும். வடிகட்டியபின் உள்ள கக்கல் மருந்தையும் தலைக்குத் தேய்க்கப் பயன்படுத்தலாம்.

சிறு கரண்டி அளவு தினம் ஒரு வேளை குழந்தைகளுக்குக் கொடுத்துவர மூன்று நாட்களில் வாதம், கசிவு, சகலவிதமான கணை நோய்களும் குண மாகும்.

## 2. திரிநேத்திர மை

சுத்தி செய்த ரசம் கால் பலம், சுத்தி செய்த நேர்வாளம் உலர்த்தியது கால்பலம், கெந்தகம் கால்பலம், முற்றிய தேங்காயின் கொட்டாச்சியை எரித்து அந்த கரியில் அரைபலம், கல்வத்தில் இவை அனைத்தையும், போட்டு அரைத்துப் பஸ்பமாக்கிக் கொள்ள வேண்டும். பின்னர் பனங் கருப்பட்டி அரைப் பலம் இத்துடன் சேர்த்து முற்றிய தேங்கா யின் பாலூற்றி முப்பத்தாறு மணி நேரம் (மூன்று சாமம்) நன்றாக அரைத்துவர வேண்டும் (அரைப் பது குறைவானால் வாய், வயிற்றில் வேக்காடு ஏற் படும்). பின்னர் திரிநேத்திர மையை அகலமான சீஸாக்களில் அடைத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

சுடர்த்தைலம், கொடுத்தவுடன் திரிநேத்திர மையில், இரண்டு குன்றிமணி அளவு வெந்நீரில் கலந்து கொடுக்க வேண்டும். பத்தியம் உண்டு. புளி, நல்லெண்ணெய், கடுகு, புகையிலை, எருமைப் பால், எருமை மோர் கூடாது.

## 3. பால சஞ்சீவி குளிகை அல்லது லிங்க மாத்திரை

சுத்தி செய்த சாதிலிங்கம் அரைப்பலம், அரிசித் திப்பிலி அரைப்பலம், கிராம்பு கால்பலம். முதலில் அரிசிதிப்பிலி, கிராம்பு இவ்விரண்டையும் தாய்ப் பால் விட்டு நன்றாக அரைத்துக்கொள்ள வேண்டும். பின்னர் இத்துடன் சாதிலிங்கத்தையும் சேர்த்து அரைத்துவர வேண்டும். பன்னிரண்டு மணி நேரம்

(ஒரு சாமம்) அழுத்தமாக அரைக்க வேண்டும். குன்றிமணி அளவு குளிகையாக உருட்டி நிலக் காய்ச்சலில் காயவைக்க வேண்டும். காய்ந்த பின் சீஸாக்களில் அடைத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

சித்தரத்தையைத் தட்டித் தண்ணீரில் போட்டு கொதிக்க வைத்து சுரசம் செய்து அந்த சுரசத்தில் ஒரு குளிகை உரைத்துக் கொடுத்துவர வேண்டும். தினம் காலை ஒரு குளிகை, மாலை ஒரு குளிகை கொடுத்துவர மூன்று நாட்களில் குணமாகும்.

மாந்தசுரம், நீர்க்கணைக் காய்ச்சல் ஆகியவை குணமாகும். இந்த மாத்திரையுடன் கஸ்தூரி மாத்திரை ஒன்று சேர்த்துக் கொடுத்துவர சளி விழும், சுகபேதி உண்டாகும்.

கணையுள்ள குழந்தைகளுக்கு சரியானபடி மலக் கழிவு ஏற்படாவிடில் மாலையில் பால சஞ்சீவி குளிகை யுடன் ரசகுளிகை ஒன்று சேர்த்துக் கொடுத்துவர வேண்டும்.

### 4. ரச குளிகை

சுத்தி செய்த ரசம் அரைப் பலம், சுத்தி செய்த கெந்தகம் அரைப் பலம், சுக்கு அரைப் பலம், சுத்தி செய்த நேர்வாளம் கால் பலம், வெங்காரம் கால் பலம்.

முதலில் சுக்கைப் பொடித்து வடிகட்டி சுத்த மாக்கிக் கொண்டு இத்துடன் கெந்தகம், ரசம், நேர்வாளம், வெங்காரம் ஆகியவற்றைச் சேர்த்து தண்ணீர் விட்டு நன்ருக அரைக்க வேண்டும்.

குன்றிமணி அளவு குளிகையாக உருட்டி நிழல் காய்ச்சலில் உலர்த்தி சீஸாக்களில் வைத்துக் கொள்ள வேண்டும்.

சிலேத்ம கணை உள்ள குழந்தைகளுக்கு பால சஞ்சீவி குளிகையுடன் ரச குளிகையும் சேர்த்துக் கொடுக்க வேண்டும். சித்தரத்தை அல்லது இஞ்சி சுரசத்தில் கொடுக்க வேண்டும். பத்துமாத பச்சிளம் குழந்தைகளுக்கு தாய்ப் பாலில்தான் கொடுத்து வர வேண்டும்.

## 5. கஸ்தூரி மாத்திரை

சுக்கு கால் பலம், அரிசி திப்பிலி கால் பலம், ஓமம் கால் பலம், சித்தரத்தை கால் பலம், கோஷ்டம் கால் பலம், அக்கிரகாரம் கால் பலம், சுத்தி செய்த இந்துப்பு கால் பலம், சுத்தி செய்த நேர்வாளம் கால் பலம், கஸ்தூரி கால் விராக னெடை.

இவற்றில் கஸ்தூரி (இந்துப்பு ஆகிய இரண்டும்) தவிர மற்றவை அனைத்தையும் கல்வத்தில் போட்டு பொடியாக்கிக் கொள்ள வேண்டும். பின்னர் இவற்றை வேலிப் பருத்திச் சாற்றில் பன்னிரண்டு மணி நேரம் அரைத்துவர வேண்டும்.

பின்னர் கஸ்தூரி, இந்துப்பு இவ்விரண்டையும் தனியாக அரைத்துப் பஸ்பமாக்கி இவற்றையும் கல்வத்தில் மற்ற மருந்துகளுடன் சேர்த்து அரைத்து வர வேண்டும். பின்னர் குன்றிமணி அளவு மாத்திரையாக உருட்டி நிழலில் உலர்த்தி எடுத்துக்

கொள்ள வேண்டும். கஸ்தூரி மாத்திரைக்குப் பேதி யாகும்.

கஷாயம்: வெள்ளைப் பூண்டு, ஓமம், பெருங் காயம், முருங்கை ஆகியவற்றைத் தட்டி வறுத்துக் கொண்டு தேன் ஊற்றி பொங்கிவரும்பொழுது தண்ணீர் விட்டுக் காய்ச்சிக் கஷாயமாக்க வேண்டும். இந்தக் கஷாயத்தில் காலை ஒன்று, மாலை ஒன்று கஸ்தூரி மாத்திரை கொடுத்துவர வேண்டும். மாந்தம், கொந்திப்பு, ஊதுபுரளி ஆகிய நோய்கள் மூன்று நாட்களில் குணமாகும். மாலையில் மாந்த சுரத்திற்கு மாந்த குளிகை அல்லது லிங்க மாத்திரை சேர்த்துக் கொடுக்கலாம்.

## 6. மாந்த சுரக் குளிகை

சுத்தி செய்த சாதிலிங்கம் அரைப் பலம், அரிசி திப்பிலி அரைப் பலம். இவ்விரண்டையும் பசுவின் பாலில் அரைத்து குன்றிமணி அளவு குளிகையாக உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

போர் மாந்தம் உள்ள குழந்தைகளுக்கு மேலே கூறிய வெள்ளைப் பூண்டு கஷாயத்தில் காலையில் கஸ்தூரி மாத்திரை ஒன்றும், மாலையில் லிங்க மாத் திரை ஒன்றும் கொடுத்துவர மூன்று நாட்களில் குணமாகும்.

## 7. செமி மாத்திரை

சுக்கு அரைப் பலம், திப்பிலி அரைப் பலம், ஓமம் அரைப் பலம், மிளகு கால் பலம், பெருங் காயம் கால் பலம், பூண்டு அரைப் பலம், இஞ்சி

கால் பலம், விறலி மஞ்சள் அரைக் கால் பலம்— இத்துடன் சருகு ஆமை ஓடு ஒன்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

முதலில் பொடுதலையை அரைத்து ஆமை ஓட்டைச் சுற்றிலும் மூடி கவசம் செய்யவேண்டும். அதன்பின்னர் இவற்றைச் சீலமண் கவசம் செய்து— (அதாவது நீளத் துணியின் இரு புறமும் களிமண் தடவி அதைக் கொண்டு மூடி கவசம் செய்வது) வெயிலில் காயவைத்து ஏழு எருக்களில் புடமிட வேண்டும்.

புடமிடப்பட்ட ஆமை ஓட்டை வெளியில் எடுத்து மேலே கூறிய மருந்துகளைச் சேர்த்து கல்வத்தில் போட்டுப் பொடித்து வேலிப்பருத்திச் சாறு விட்டு பன்னிரண்டு மணி நேரம் அரைக்க வேண்டும். குன்றிமணி அளவு குளிகையாக உருட்டி நிழலில் காயவைத்து சீசாவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

ஓமம், கசகசா இவற்றைச் சட்டியில் வறுத்துப் பொரியும்பொழுது தேன் விட்டுப் பொங்கும் பொழுது தண்ணீர் ஊற்றிக் கஷாயமாக்க வேண்டும். இந்தக் கஷாயத்தில் ஒரு சங்கு அளவு எடுத்து, அதில் செமி மாத்திரையில் ஒன்று கலந்து காலை ஒன்று, மாலை ஒன்று வீதம் மூன்று நாட்கள் கொடுத்துவர செமியாத கோளாறுகள் குணமாகும்.

வயிறு பேதி குறையும்; மலத்தைக் கட்டும். நல்ல பசி ஏற்படும். மாந்தக் கோளாறு உள்ள குழந்தைகளுக்கு இத்துடன் மாந்த சுர குளிகை ஒன்று மாலையில் மட்டும் கொடுத்துவர வேண்டும்.

## 8. கோரோசனை மாத்திரை அல்லது ரச செந்தூர மாத்திரை

சுத்தி செய்த சாதிலிங்கம் அரைப் பலம், அரிசி திப்பிலி அரைப் பலம், குங்குமப்பூ அரை விராகனெடை, செண்பகப்பூவின் மொட்டு அரைப் பலம், கோரோசனை கால் விராகனெடை, ரோஜாப்பூவின் மொட்டு அரைப் பலம்.

முதலில் ரச செந்தூரம், சாதிலிங்கம் இவ்விரண்டையும் தாய்ப்பாலில் பன்னிரண்டு மணி நேரம் (ஒரு சாமம்) ஊறவிட வேண்டும். பின்னர் அவற்றை வெளியில் எடுத்து கல்வத்திலிட்டு அவற்றுடன் அரிசி திப்பிலி சேர்த்துப் பொடிக்க வேண்டும்.

செண்பகப்பூவின் மொட்டை கால் படி தண்ணீர் விட்டு வீசம் படி ஆகும் அளவு நன்ருகக் காய்ச்ச வேண்டும். செண்பகப்பூ மொட்டு கஷாயத்தை விட்டு கல்வத்திலுள்ள மருந்துகளை அரைக்க வேண்டும். இத்துடன் கோரோசனையையும் சேர்த்து அரைத்து வரவேண்டும். இவ்வாறு பன்னிரண்டு மணி நேரம் அரைத்து அதன் பின்னர் செண்பகப்பூ மொட்டு கஷாயம் போன்று ரோஜாப்பூவின் மொட்டு கியாழத்திலும் பன்னிரண்டு மணி நேரம் அரைக்க வேண்டும். மாத்திரையாக உருட்டும் பக்குவம் வரும்வரை அரைக்க வேண்டும்.

பின்னர் குன்றிமணி அளவு மாத்திரையாக உருட்டி நிழலில் காயவைத்து சீசாவில் அடைத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

துளசிக் கஷாயத்தில் காலை, மாலை ஒரு மாத்திரை வீதம் மூன்று நாட்கள் கொடுத்துவர காய்ச்சல், தொந்திப்பு, ஜன்னி ஆகிய நோய்கள் குணமாகும்.

### 9. லிங்க செந்தூரம்

சுத்தி செய்த சாதிலிங்கம் ஒரு பலக் கட்டி; இந்த சாதிலிங்கக் கட்டியை தாய்ப்பாலில் பன்னிரண்டு மணி நேரம் ஊறவைக்க வேண்டும். சுத்தி செய்த கெந்தகம் கால் பலம், சுத்தி செய்த தாளகம் கால் பலம்—இவ்விரண்டையும் பொடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

பின்னர் வட்டமான ஒரு மண் ஓட்டை அடுப்பில் ஏற்றி சிவக்கக் காயவைத்து அந்த சட்டியில் பொடித்து வைத்திருக்கும் இரண்டு மருந்தின் தூள்களைத் தூவவேண்டும். அதன்மீது லிங்கக்கட்டியை நடுவில் வைத்து, லிங்கக்கட்டியின் மீதும் மருந்தின் தூள்களைத் தூவி வரவேண்டும். ஒரு கம்பி கொண்டு புரட்டிப் புரட்டி எடுக்கத் தீ எரியும் சட்டியின் சூட்டால் உருகிய மருந்து லிங்கத்தை மூடிக்கொண்டு விடும். அவ்வாறு முழுமையும் மூடிய பின்னர் லிங்கத்தை சட்டியில் இருந்து வெளியில் எடுத்து கல்வத்திலிட்டு அரைத்து செந்தூரமாக்க வேண்டும். பாதுகாப்பாக சீசாவில் அடைத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

விடாத காய்ச்சல், விஷசுரம், கணைச்சுரம்—இவற்றிற்கு கோரோசனை மாத்திரையுடன் லிங்க செந்தூரம் இரண்டு அரிசி அளவு காலை, மாலை கொடுத்துவர மூன்று நாட்களில் குணமாகும்.

கஸ்தூரி மாத்திரை ரச குளிகை கொடுக்கும் பொழுதும் லிங்க செந்தூரம் சேர்த்துக் கொடுத்து வரலாம். விரைவில் நோய் குணமாகும்.

மேற்கூறியவாறு கோரோசனை மாத்திரை, கஸ்தூரி மாத்திரை ரச குளிகை இல்லாவிடில் லிங்க செந்தூரத்தைத் தேனில் கொடுத்து வரலாம். துளசிச் சாற்றிலும் தூதுவளைச் சாற்றிலும் லிங்க செந்தூரத்தைக் கொடுத்துவரலாம்.

லிங்க செந்தூரத்தைத் தேனில் கலந்து துளசி, தூதுவளைச் சாற்றில் தனித்துக் கொடுக்கும்பொழுது ஒரு குன்றிமணி அளவு கொடுத்துவர வேண்டும்.

## 10. தாளக பஸ்பம்

கற்பூர சலாசத்து ஒரு பலம், சீனிக்காரம் ஒரு பலம்—இவ்விரண்டையும் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து வில்லை தட்டி வெயிலில் காயவைக்க வேண்டும்.

பின்னர் சுண்ணும்பு நீற்றி சுண்ணும்பைக் குகையாகச் செய்து அதனுள் காய்ந்த மருந்து வில்லையை வைத்து சீலைமண் கலசமிட்டு காயவைக்க வேண்டும். இதை ஒரு கெஜ புடமிட்டு பஸ்பமாக்க வேண்டும். அதாவது இருபது எரு வைத்து புடமிடுவது கெஜபுடமாகும். புடமிட்டபின் கவசத்தினுள் உள்ள குகையை நீக்கி மருந்தை எடுத்து கல்வத்தில் அரைத்து பஸ்பமாக்கிக்கொள்ள வேண்டும்.

பிறகு தாளகம் ஒரு பலம் தண்ணீர் விட்ட ரைத்து வில்லை தட்டி வெயிலில் காயவைத்து

எடுத்துக் கொள்ள வேண்டும். முன்பு தயாரித்து வைத்திருக்கும் பஸ்பத்தைத் தண்ணீர்விட்டு அரைத்துக் குகைசெய்து அதற்குள் தாளக வில்லையை வைத்து மூடிவிட வேண்டும். இந்தக் குகையை வெயிலில் காயவைத்து எடுக்க வேண்டும். பின்னர் வெந்தயத்தை ஊறவைத்து, அரைத்து அதைக் கொண்டு தாளகக் குகையை மூடி சீலமண் கவசமிட்டு வெயிலில் காயவைத்து கோழிபுடம் போடவும். ஒரு கோழி உயர அளவு எருக்களை அடுக்கி புடமிடுவது கோழிப்புடமாகும்.

புடமிட்ட மருந்தை வெளியில் எடுத்து பஸ்பமாக்கிக்கொள்ள வேண்டும். இந்த பஸ்பத்தில் இரண்டு அரிசி அளவு குழந்தைகளுக்கும், ஒரு குன்றிமணி அளவு பெரியவர்களுக்கும் கொடுத்து வர வேண்டும்.

தாளக பஸ்பமும், லிங்க செந்தூரமும் ஒவ்வொரு அரிசி அளவு சேர்த்துத் தினம் ஒரு வேளை வீதம் கொடுத்துவர சகலவிதமான ஜுரங்களும், சிலேத்ம வியாதிகளும் குணமாகும்.

பெரியவர்கள் இருமல், இளைப்பு போன்ற சிலேத்ம நோய்களால் அவதிப்பட்டால்—சித்தரத்தை, கடுக்காய்த் தோடு எடுத்து இவ்விரண்டையும் லேசாக வறுத்துத் தூளாக்கி சுண்டைக்காய் அளவு எடுத்து அத்துடன் தாளக பஸ்பம் ஒரு குன்றிமணி அளவு சேர்த்துத் தேனில் குழப்பிக் கொடுத்து வரவேண்டும். மூன்று நாட்களில், ஆறு வேளைகளில் இருமல், இளைப்பு போன்ற சிலேத்ம நோய்கள் தீரும்.

## 11. கட்டுவாதிக் குளிகை

சாதிக்காய் ஐந்து கூட்டை நீக்கிவிட்டு எடுத்துக் கொள்ள வேண்டும். அபின் அரைக் கொட்டைப் பாக்கு அளவு வாங்கி சாதிக்காய்களில் துளை போட்டு உள்ளே அபினைச் செலுத்த வேண்டும்.

மஞ்சளை அரைத்து ஒவ்வொரு சாதிக்காய்க்கும் கவசமிட வேண்டும். இவற்றை வேடுகட்டி நீராவியில் அவிக்க வேண்டும். நன்ருக சாதிக்காய் அவிந்ததும் கவசமிட்ட மஞ்சளை நீக்கி சாதிக்காயை தாய்ப்பால் விட்டு கல்வத்தில் அரைக்க வேண்டும். இவற்றைக் குன்றிமணி அளவு குளிகையாக உருட்டிக்கொள்ள வேண்டும்.

தேனில் காலை மாலை ஒவ்வொரு குளிகை கொடுத்துவர சீதபேதி மூன்று நாட்களில் நிவர்த்தி யாகும். சீதம், ரத்தம் விழுதலும் நின்றுவிடும். வெள்ளாட்டின்பால் அல்லது ஓமம் கஷாயத்திலும் குளிகையைக் கலந்து கொடுத்தாலும் நிவர்த்தி யாகும்.

## 12. கட்டுவாதி லேகியம்

தண்ணீர்விட்டான் கிழங்கு சாறு கால்படி, பசுவின் நெய் கால்படி, வெள்ளாட்டின் பால் கால் படி இவை மூன்றையும் ஒன்ருகக் கலக்க வேண்டும்.

கசகசா, ஓமம், சாதிக்காய், மாசிக்காய், கடுக் காய் இவை ஒவ்வொன்றும் கால் பலம் வாங்கி வெள்ளாட்டின் பால் விட்டு அரைத்துக் கொண்டு மேற்கூறியவற்ளுேடு ஒன்று சேர்த்து விடவேண்டும். இவை அனைத்தும் ஒன்ருகக் கலந்தபின்னே கால்

வீசை நாட்டு சீனியைக் கலந்து அடுப்பிலேற்றி எரித்துவர வேண்டும். லேகிய பதம் வரும்வரை சுண்டவேண்டும். லேகிய பதம் வந்ததும் லேகியத்தை இறக்கி வைத்துக் கொள்ளவும்.

இந்த லேகியத்தை சீதம், இரத்தசீதம் கண்டவர்களுக்குக் கொடுத்துவர குணமாகும்.

## 13. ரவணகுணுதி நெய் அல்லது சித்தாதி நெய்

ஆமணக்கு நெய் கால்படி, தனித் தேங்காய்ப் பால் கால்படி, கோஷ்டம், அக்கிரகாரம் வகைக்குப் பலம் கால், இந்துப்பு, வெடியுப்பு, கல்லுப்பு, கடலுப்பு, சோடா உப்பு, சவட்டுப்பு, வளையலுப்பு, பொட்டுலுப்பு—வகைக்குப் பலம் கால்—நேர்வாளம் கால் பலம், சவுக்காரம் ஒரு கட்டி—இவற்றைத் தனித்தனியாகப் பவுடர் செய்து இவை அனைத்தையும் ஒன்ருகக் கலந்து அதாவது ஆமணக்கு நெய், தேங்காய்ப் பால் இவ்விரண்டையும் ஒன்ருகக் கலந்து, அவற்றில் ஒன்று கலந்த பவுடர்களைக் கலக்கி அடுப்பில் ஏற்றிக் காய்ச்ச வேண்டும். பொங்க, பொங்க காய்ச்சிக் கொண்டிருக்க வேண்டும். பொங்குவது தணிந்து விடும். அவ்வாறு வருவது பதம்வரும் நிலை ஆகும். சரியான பதம் வந்ததும் சிவந்த நிறமாகி விடும். அப்பொழுது இறக்கி வடிகட்டி தைலத்தை அகன்ற சீசாக்களில் அடைத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

ரவணகுணுதி எண்ணெயில் ஒரு காசு எடை பசும் பாலில் அல்லது தாய்ப்பாலில் ஊற்றி காலையும், மாலையும் கொடுத்துவர வேண்டும்.

மாலையில் சிறிது அளவு குறைத்துக் கொள்ள வேண்டும். சிறு கரண்டி அளவு ஒரு காசு எடை அளவாகும்.

குன்மவாய்வு, குன்மவலி, நீராமைக்கட்டி, மண்கட்டி, பால்க்கட்டி, பால்திரட்சி போன்ற நோய்கள் குணமாகும். மேலும் விஷக்கரப்பான், பாண்டு நீர் போன்ற நோய்களும் தீரும்.

வடிகட்டிய மருந்தின் மக்குவை பனங்கருப்புக் கட்டியுடன் சேர்த்து அரைத்து வைத்துக்கொண்டு ஒரு சுண்டைக்காய் அளவு தினம் ஒரு வேளை கொடுத்து வந்தால் வயிற்றுப் பொருமல், வயிற்று வலி தீரும். சிறிது வயிறு பேதியாகும்.

## 14. சிறுகணைத் தைலம்

வேம்பு நெய் கால்படி, தாளகம் கால் பலம், பால்சாம்பிராணி கால் பலம், கடுகு கால் பலம், வெள்ளைப்பூண்டு ஒரு பலம்.

முதலில் தாளகத்தைப் பொடியாக அரைக்க வேண்டும். பின்னர் சாம்பிராணி, கடுகு இவற்றைத் தனித்தனியாக அரைத்துக் கொள்ள வேண்டும். இவை மூன்றையும் ஒரு கல்வத்தில் போட்டு வெள்ளைப்பூண்டுடன் சேர்த்து சிறிது ஒன்றிரண் டாகத் தட்ட வேண்டும். இவற்றில் ஒரு கோழி முட்டையை உடைத்துக் கலக்கிக்கொண்டு வேம்பு நெய்யில் கலந்து அடுப்பேற்றிக் காய்ச்ச வேண்டும். சிறிது தட்டிப் போட்ட வெள்ளைப்பூண்டு துகள்கள் மஞ்சள் நிறமாகி விடும். இதுவே தைலத்தின் பதம்.

உடனே இறக்கி வடிகட்டி தைலத்தை சீசாவில் அடைத்துக் கொள்ள வேண்டும்.

குழந்தைகளுக்கு சிறு கரண்டி அளவு சிறுகணைத் தைலம் காலையில் கொடுக்க வேண்டும். உடனே தாய்ப்பாலில் ரச குளிகை ஒன்று கலந்து கொடுத்து விடவேண்டும். பெரிய குழந்தையாக இருந்தால் வெந்நீரில் ரச குளிகை கலந்து கொடுக்க வேண்டும்.

மாலையில் பாலசஞ்சீவி குளிகை ஒன்று தாய்ப் பாலில் அல்லது வெந்நீரில் கொடுத்து விட வேண்டும். இவ்வாறு கொடுத்துவர சிறுகணை, நாய்கணை, சுவாசகணை, சுளிகணை போன்ற கணை நோய்கள் குணமாகும். மூன்று நாட்களில் குணம் அடைந்து வருவதைக் காணமுடியும். இருந்தாலும் முழு குணம் அடையும்வரை கொடுத்துவர வேண்டும்.

# சித்தர் மருத்துவ அரும்பொருள்

## பதவுரை

1. சிகப்பு = லிங்கம்
2. எரிச்சல் = பெருங்காயம்
3. பொரிச்சல் = வெங்காரம்
4. சிவப்பு நாவற்பொரி = வெங்காரம்
5. வேந்தன் = ரசம்
6. நாற்றம் = கந்தகம்

*7. திரிபலை = கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் ஆகியவை

8. சிலை = மனோசிலை
9. குமரி = சோற்றுக்கற்றாழை
10. சடைவள்ளி கற்பம் = சடைக்குஞ்சரம்
11. ஆனந்த மூலி = கஞ்சா
12. மது = தேன்
13. காமப்பால் = முலைப்பால்
14. சோகி = பலகரை
15. மண்டூரம் = பழஞ் செங்கற் சிட்டம்
16. அசுவகெந்தி = அமக்கரு
17. நிம்பவித்து = வேப்பங் கொட்டை

18. கூந்தல்=முதியார் கூந்தல்
19. கரியபோளம்=கருப்பு குங்கிலியம்
20. முத்தக்காசு=கோரைக்கிழங்கு
21. மேஷம்=வெள்ளாடு
22. குக்குடம்=கோழி
23. காணுங்கள்ளி=இலைக்கள்ளி
24. வேந்தன்பட்டை=அரசன்பட்டை
25. வாசுகி=நாகம்
26. கலிங்கம்=தும்மட்டிக்காய்
27. அரிதாரம்=தாளகம்
28. வருவாகப்பட்டை=சன்ன லவுங்கப்பட்டை
29. மூதண்டகியாழம்=அருகுவேர் கியாழம்
30. உள்ளி=வெள்ளைப்பூண்டு
31. வழலை=உப்பு
32. ஏரண்டம்=ஆமணக்கு
33. அமுரி=மூத்தாரம்
34. கரிச்சாலை=கரசலாங்கண்ணி
35. கரந்தை=சிவகரந்தை
36. குடன்=சூடன்
37. வெள்ளை=சங்கு பாஷாணம்
38. கடிகை=நாழிகை
39. திஜிர்=திராவிகம்
40. வாலுகை=அடுப்பு
41. பூப்புடம்=குழிப்புடம்
42. வஸ்து=மதுபானம்
43. மயனம்=மெழுகு
44. காரம்=வெங்காரம்

45. சினம்=படிகாரம்
46. மண்டலம்=நாற்பது நாட்கள்
47. துத்தம்=பால்துத்தம்
48. குலாமல்லி=முள்செவ்வந்தி
49. காரம்=ஜெய நீர்
50. எலியால்=காட்டாமணக்கு
51. சூதம்=ரசம்
52. கழஞ்சு=40 குன்றிமணி எடை
53. நாதம்=ரசம்
54. குடவன்=பித்தளை
55. ஈசன்=ரசம்
56. பிரமத்தண்டு=குருக்கு
57. இந்திரகோபம்=சிகப்புப் பட்டுப்பூச்சி
58. சாரம்=நவச்சாரம்
59. விடந்தீஞ்சான்=கொல்லைப் பல்லி
60. அரிதாரம்=தாளகம்
61. பூரம்=ரச கற்பூரம்
62. *திரிகடுகம்= சுக்கு, திப்பிலி, மிளகு ஆகியவை
63. நாகம்=காரீயம்
64. வங்கம்=வெள்ளீயம்
65. வேதன்=கடுக்காய்
66. சாதிப்பூ=பிச்சிப்பூ
67. சித்திரபாலை=சிறு அம்மன் பச்சரிசி
68. சிவயோகி=வசம்பு
69. ஈயம்=ஈருள்ளி, வெங்காயம்
70. உபாதம்=வெடியுப்பு
71. உன்னி=அழிஞ்சில்

72. ஊதிகை = முல்லை
73. அமிர்தம் = மிளகு
74. அமுகம் = கடுக்காய்
75. அம்மை = வெட்டிவேர்
76. அயவி = சிற்றரத்தை
77. அயலாரி = வசம்பு
78. அரவிந்தம் = தாமரை
79. அரிசனம் = மஞ்சள்
80. ஆவல்லி = சிந்தில்
81. ஆதளை = ஆமணக்கு
82. அரிமஞ்சரி = குப்பைமேனி
83. அறுசுவை = கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு
84. முன்பனிக்காலம் = ஐப்பசி, கார்த்திகை
85. பின்பனிக்காலம் = மார்கழி, தை
86. இளவேனிற்காலம் = மாசி, பங்குனி
87. முதிர்வேனிற்காலம் = சித்திரை, வைகாசி
88. மேகம் = மேக காங்கை, மேக காரம், மேக கிராணி, மேக சூலை, மேக படலம், மேகரணம், மேகவாயு, மேகவெட்டை
89. வாசனைத் திரவியம் = இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம்
90. தசமூலம் = வாகை, முல்லை, பாதிரி, நெருஞ்சி, பேராமுட்டி, கூவிளை, சிற்றாமுட்டி, சிறுவிழுதுணை, கண்டங்கத்தரி, குமிழ்.

91. மூலவல்லி=வெற்றிலை
92. கெந்தகம்=பச்சை கற்பூரம்
93. கெந்தி=கந்தகம்
94. கெளித்த பச்சை=பச்சை கற்பூரம்
95. சிற்றுமரைப்பூ=பன்னீர்ப்பூ
96. சிகாரவுப்பு=கல்லுப்பு
97. சிவமூலகாரம்=சீனகாரம்
98. சிலைகாரம்=வெடிகாரம்
99. சிவயோகி=வசம்பு
100. சிலை=வெண்காரம்
101. வலம்புரி=நந்தியாவட்டம்
102. வாத தேகிகளுக்கு ரச வகை=இளந்தண்டு, தூதுவளை, பாகல், பொன்னுங்காணி, முருங்கை, வெள்ளைச்சாட்டரணை ஆகியவை களின் தளிர்.
103. வாத தேகிகளுக்கு வற்றல் வகை=அவரைக் காய், ஆதொண்டைக்காய், சுண்டைக்காய், துவரங்காய்.
104. பித்த தேகிகளுக்கு ரசவகை=அகத்தி, கொடி வசலை கொத்துவசளை, தைவேலி ஆகியவை களின் தளிர்
105. பித்த தேகிகளுக்கு வற்றல் வகை=கண்டங் கத்திரி சுண்டைக்காய், தூதுளங்காய், பேய்ப் புடல், மணத்தக்காளி, முள்ளிக்காய்,வல்லா ரைக்காய்,
106. நான்குவகை உண்டி=கைபாகம், செய்பாகம் ருசிபாகம், சாசனபாகம், உண்ணப்படுவது,

தின்னப்படுவது, நக்கப்படுவது, பருகப் படுவது.

107. இந்திகோபம்=ஈயம்,

108. தம்பலப்பூச்சி=இந்திரகோபம்

109. இந்திர சுகந்தம்=நன்ஞரி

110. இந்திரவல்லி=முடக்கற்ருன்

111. ஐந்துப்பு=பஞ்சலவணம் (வெடியுப்பு, இந்துப்பு, வளையலுப்பு, கரியுப்பு, கல்லுப்பு)

112. புடம்=காரைப்புடம் ஒரு எருவில்; கவுதாரி புடம், முன்று எருவில்; குக்குடபுடம்; பத்து எருவில்; வராகபுடம் 20 எருவில், 50 எருவில், 100 எருவில் போடும் புடம்.

113. பத்திரி=சாதிபத்திரி, தாளிசபத்திரி, லவங்க பத்திரி.

114. ஐந்துப்பு=பஞ்சலவணம் (வெடியுப்பு, இந்துப்பு, வளையலுப்பு, கரியுப்பு, கல்லுப்பு)

115. பஞ்சவலக்கம்=அத்தி, அரசு, ஆல், பூவரசு, வேல்

116. நுணு=மஞ்சனத்தி

117. சமூலம்=செடி, வேர், காயுடன் கூடியது

118. சாமம்=பன்னிரண்டு மணிநேரம்

## எடை

(குன்றிமணி=குண்டுமணி)

1 குன்றிமணி=1.76 கிரயின்

32 குன்றிமணி=1 வராகன்=$58\frac{8}{17}$ கிரயின்

$40$ குன்றிமணி $= 1$ கழஞ்சு

$3\frac{3}{16}$ வராகன் $= 1$ தோலா $= 180$ கிரயின்

$9\frac{9}{16}$ வராகன் $= 1$ பலம் $= 3$ தோலா

$8$ பலம் $= 1$ சேர்

$5$ சேர் $= 1$ வீசை

$8$ வீசை $= 1$ மணங்கு

$12\frac{4}{5}$ பலம் $= 1$ பவுண்டு

$3\frac{1}{8}$ பவுண்டு $= 1$ வீசை



